சிவாசார மாலா ஸங்க்யா—எ

---

உ

சிவமயம்

ஸ்ரீ நிஜகுண சிவயோகிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# அநுபவஸாரம்

இது

சேலம் செவ்வாய்ப்பேட்டை

வீரசைவ—சென்னபசவைய செட்டியாரவர்கள் குமாரர்

**S. C. நாகிசெட்டியார் அவர்களால்**

கன்னடத்திலிருந்து தமிழில்

மொழிபெயர்க்கப்பட்டு



சென்னை

குருபசவா அண்டு கம்பெனி லிமிடெட்

அவர்களால்

பதிப்பிக்கப்பட்டது

1933

விலை அணு 5]

[ரிஜிஸ்தர் செய்யப்பட்டது

உ

சிவமயம்

# முகவுரை

---

## நூல் வரலாறு

யோகம், ஸாங்க்யம், ந்யாயம், வைசேஷிகம், பூர்வமீமாம்ஸா, உத்தரமீமாம்ஸா வென்னும் ஆறு தர்சனங்களில் வ்யாஸ முனிவரால் இயற்றப்பட்ட உத்தரமீமாம்ஸாவுக்கு வேதாந்தமென்னும் உபநிஷத்துக்களே மூலமாம். இவ் வேதாந்த சூத்திரங்களுக்கு கி. பி. எட்டாம் நூற்றுண்டில் இருந்த ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியர் சக்தி விசிஷ்டாத்வைதபரமான வீரசைவ பாஷ்யத்தைச் செய்தனர். அக் காலத்திருந்த ஸ்ரீ சங்கராசாரியர் அந்தச் சூத்திரங்களுக்கு அத்வைத பரமான பாஷ்யத்தைச் செய்தனர். இது சங்கரபாஷ்யமெனப்படும். இது வடமொழியில் இயற்றப்பட்டிருப்பதனாலும், கல்வியில் வல்லுநரே உணரக் கூடியதாயிருப்பதனாலும், ஸ்ரீ சங்கராசாரியரைப் பின்பற்றிய சில பண்டிதர்கள் பஞ்சதசீ, ப்ருஹத்வாஸுதேவமனனம், லகுவாஸுதேவமனனம், ப்ரஹ்மாநந்தீயம் முதலிய அநேக அத்வைத நூல்களை எளிய நடையில் இயற்றினார்கள். பின்பு த்ராவிடம், ஆந்த்ரம், மலையாளம், மஹாராஷ்ட்ரம் முதலிய தேசங்களிலிருக்கும் அத்வைத மதத்தைத் தழுவிய வடமொழிப் பண்டிதர்கள் அத்வைத நூல்களைத் தந்தந் தேச பாஷைகளில் செய்யுள் நடையிலும், உரை நடையிலும் இயற்றி வெளியிட்டார்கள். இவ்வாறிருக்க, நிஜகுண சிவயோகியென்னும் பண்டிதர் வடமொழி யறியாத கன்னடியர்களுக்கு அத்வைத மத தத்துவத்தைத் தெரிவித்தல் வேண்டுமென்னும் விருப்பத்தால் கன்னட பாஷையில் செய்யுள் நடையில் கைவல்யபத்ததி, பரமாநுபவபோதம், அநுபவஸாரம், அநுபவகீதையென்னும் நான்கு நூல்களையும், பிறகு உரை நடையில் பரமார்த்த ப்ரகாசிகை யென்னும் யோக சாஸ்த்ரத்தையும், வேதாகம புராணஸாரமான விவேகசிந்தாமணி யென்னும் நூலையும், த்ரிபதி (மூவடிச்செய்யுள்) நடையில் த்ரிஷஷ்டி புராதன தோத்திரமென்னும் நூலையும் இயற்றினர். தற்காலம் பிரசித்த

மாயிருக்கும் த்வைதம், அத்வைதம், விஶிஷ்டாத்வைதம், ஶக்தி விஶிஷ்டாத்வைதம் (வீரஶைவம்) என்னும் நான்கு மதங்களில் அத்வைத, ஶக்தி விஶிஷ்டாத்வைத நூல்கள் மாத்திரம் இந்தியாவிலுள்ள எல்லாப் பாஷைகளிலும் வெளியாயிருக்கின்றன.

## நூலாசிரியர் வரலாறு

நிஜகுண சிவயோகிகளென்னும் லிங்கதாரி ப்ராஹ்மணர் மைசூரில் தென்பாகத்தில் வசித்திருந்தனர். இவர் வடமொழியிலும், கன்னட மொழியிலும் வல்லுநராய் இல்லறத்திலிருக்கும்போதே ஶம்புலிங்க ஸ்வாமிகளென்னும் ஸத் குருவினிடம் ஜ்ஞானோபதேஶமடைந்து, சித்த பரிபாகத்தினாற் குடும்ப வாழ்க்கையில் வைராக்யமடைந்து, கோயமுத்தூரைச் சேர்ந்த கொள்ளேகாலம் தாலூகா, சிலகவாடி யென்னும் கிராமத்திற்கடுத்த ஒரு மலையினிடத்திருந்து, யோகாப்யாஸஞ் செய்து, பரமஜ்ஞானியாக விளங்கி, அவ்விடத்திலேயே தேகவ்யோக மடைந்தனர். அதுமுதல் அம் மலைக்கு நிஜகுணர் மலை யென்றும், ஶம்புலிங்கமலை யென்றும் அவருக்கு நிஜகுண சிவயோகிகளென்றும் பெயர் உண்டாயின. அம் மலையில் ஶம்புலிங்க ஸ்வாமிகளின் தேவாலயம் ஒன்று உண்டு. நிஜகுண சிவயோகிகளுக்கு வேதம், வேதாந்தம், ஆகமம், புராணம், தர்க்கம், ஸங்கீதம், வியாகரணம், யோகம் முதலிய வித்தைகளிலும், அநேக மத சித்தாந்தங்களிலும், பூர்ண பாண்டித்யம் இருந்ததென்பது இவரால் இயற்றப்பட்ட விவேக சிந்தாமணியால் வெளியாகிறது. இவர் வடமொழியில் எத்தனை நூல்களை இயற்றியிருக்கின்றாரென்பது தெரியவில்லை. ஆனால், இவரால் வடமொழியில் இயற்றப்பட்டதாகச் சொல்லப்படும் ஆத்மதர்க்க சிந்தாமணி யென்னும் நூலும் இப்போது கிடைக்கவில்லை. இவர் காலம் இவர் எழுதிய நூல்களினால் அறியப்படவில்லை. ஆயினும், கி. பி. 14-ம் நூற்றாண்டில் பாற்குருகி சோமநாதாராத்திரியர், ஹம்பே ஹரீஶ்வரர் முதலிய பண்டிதர்கள் தமது நூல்களில் வசவண்ணரைத் துதித்திருக்கிறார்கள். நிஜகுண சிவயோகிகள் இயற்றியிருக்கும் கைவல்யபத்ததி முதலிய நூல்களில் வசவண்ணருடைய நாமதேயமே இல்லை. இக்காரணத்தினால், நிஜகுண சிவயோகிகள் வசவண்ணரின் அவதாரத்திற்கு முன் அதாவது கி. பி. 12-ம் நூற்றாண்டில் இருந்தவரென்று சிலர் மதிக்கின்றனர். இம் மதிப்பு நம்பக் கூடியதாயில்லை. ஏனெனின், தற்காலத்திய வீரசைவர்களிற் சிலர்

வசவண்ணரை மதாசாரியரென்று கருதுகின்றனர். சிலர் மதஸ்தாபகரென்றும் கூறுகின்றனர். ஸ்ரீ ரேணுகர் முதலியவர்களே வீரசைவ சமயாசாரியர்களாவர். நீலகண்ட சிவாசாரியரே பாஷ்ய மூலமாய் மதஸ்தாபனஞ் செய்தனர். வசவண்ணர் ஆசாரிய வமிசத்தினராயிருந்தால் மதாசாரியரென்று சொல்லவேண்டும். மேலும், மதஸ்தாபனத்திற்காகச் சித்தாந்த நூல் ஒன்றும் இயற்றினரில்லை. ஆதலால், மதஸ்தாபகரென்று கூறுவதற்கும் இடமில்லை. ஆனால், இவர் அருளிய வேதாந்த ரஹஸ்யங்கள் அடங்கிய மாணிக்கம் போன்ற திருமொழிகள் கன்னடத்தில் உரைநடையில் பலவுள.

நாரதமுனிவர் திருக் கயிலாயத்திற்குச் சென்று சிவபெருமானைத் தரிசிக்க, சிவபெருமான், ஓ நாரதனே! பூலோகத்தில் என்ன விசேஷமென்று வினவ, நாரதர், சுவாமின்! சிவ பக்தியானது எல்லாவிடங்களிலும் அதிகமாயுள்ளது. இமாசலத்தின் தென்பாகத்தில் மாத்திரம் ஜயினர், பௌத்தர் முதலியவர்களின் பெருக்கத்தினால் சிவமதம் குறைந்துள்ளது. ஆகையால், தேவரீரே அவதரித்து உமது சமயத்தை உத்தாரணஞ்செய்தல் வேண்டுமென்று வேண்டினரென்றும், அப்போது சிவபெருமான் தமது வாகனமும், தர்ம மூர்த்தியுமாகிய நந்தியெம்பெருமானை நோக்கி, "நீ பூலோகத்தில் மதுவரசன் என்னும் அலிங்கிப் பிராமணனுக்குப் புதல்வனாய்ப் பிறந்து மகிமையினால் நாஸ்திக முதலிய சமயங்களை யழிப்பாயாக" என்று கட்டளையிட்டு, ஹஸ்தஸ்பர்சம், வாக்ஸ்பர்சம், நேத்ரஸ்பர்ச முதலிய பஞ்சசக்திகளையும், சில கணநாதர்களையும் உதவி யனுப்பினரென்றும் வசவபுராணம் கூறுகிற்கும். இதனால் வசவண்ணர் அவதாரத்திற்கு முன்னரும் வீரசைவ சமயம் இருந்ததென்பதும், வேதாகமாதிகளை ஒத்துக்கொள்ளாத ஜயினம், பௌத்த முதலிய சமயங்களைக் கண்டித்து, சிவபக்தியின் வளர்ச்சிக்குத் தடையாயிருப்பனவற்றை யொழிப்பதன் பொருட்டு அவர் அவதரித்தாரென்பதும் பெறப்படுவதால் வசவண்ணர் மகிமையினால் சிவசமயத்தை உத்தாரணஞ்செய்த மஹா புருஷரேயன்றி மதாசாரியருமல்லர், மதஸ்தாபகருமல்லரென்பது போதரும். வசவண்ணர் சிவபக்தியிற் சிறந்து விளங்கினவராதலின், வீரசைவ பண்டிதர்கள் வசவண்ணரைப் புகழ்ந்திருக்கின்றார்கள். மேலும், சித்தாந்தைக்ய நிஷ்டர்களும், வீரசைவ பண்டிதர்களுமாகிய ஸ்ரீ ரேணுகாசாரியர், நீலகண்ட சிவாசாரியர், மஞ்சண பண்டிதர்

மாயிதேவர், மல்லிகார்ஜுன பண்டிதர் முதலிய மதப்பிரவர்த்தகர்களையும் புகழ்ந்திருக்கிறார்கள் இவ்வாற்றால் நிஜகுண சிவயோகிகள் வசவண்ணருக்கு முற்பட்டவரென்று நிச்சயிப்பதற்கிடமில்லை. நிஜகுண சிவயோகிகள் இயற்றிய நூல்களில் நவீன கன்னட வார்த்தைகள் விசேஷமாய்க் காணப்படுவதனால், இவர் 16-ம், 18-ம் நூற்றாண்டுகளின் மத்திய காலத்திலிருந்தவரென்று தோன்றுகிறது. இவ் விஷயம் 17-ம் நூற்றாண்டிலிருந்த எளந்தூர் ஷடக்ஷர ஸ்வாமிகள் இயற்றிய ராஜசேகரமென்னும் சிறந்த கன்னட நூலின் பீடிகையில் விவரிக்கப்பட்டிருக்கிறது.

## இந் நூலை வெளியிடுதற்குக் காரணம்

வீரசைவம், அத்வைத பரமான பிரபுலிங்கலீலை, வேதாந்த சூடாமணி, ஞானவாஸிஷ்டம், கைவல்யம், பிரபோத சந்திரோதயம், குமாரதேவர் சாத்திரம், பாடுதுறை, வாஸுதேவ மனனம் முதலிய அரிய பெரிய நூல்களை விரிவாகத் தமிழில் பெரியோர்கள் முன்னரே இயற்றியுள்ளாராயினும், விருத்திப்பிரபாகரம், ஆத்மபுராணம், விசார சாகரம் முதலிய நூல்கள் இந்தி முதலிய பாஷைகளிலிருந்து, பின்னர்த் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றன. கன்னட பாஷையிலும் சிறந்த நூல்கள் பல இருத்தலின், அவற்றுள் சிலவற்றைத் தமிழில் மொழிபெயர்க்க வேண்டுமென்னும் பேரவா எனக்கு நெடுநாளா யிருந்தது. கன்னட தேசத்தில் பெரும்பான்மையாய்ச் சான்றோரால் நன்கு மதித்துக் கையாளப்படுவனவும், நிஜகுண சிவயோகிகள் முதலிய பெரியோர்கள் தம் அநுபூதியினின்றும் உதித்தவாறு அருளியனவுமாகிய மிகச் சிறந்த கன்னட நூல்கள் பலவுள. அவை வீரசைவத்தையும், அத்வைதத்தையும் தழுவியுள்ளன; ஆதலால், இத்தகைய நூல்கள் தமிழில் வெளிவரின், வேதாந்த விசாரணை செய்யும் முமுக்ஷுக்களுக்கு உபகாரமாயிருக்கு மென்றெண்ணி, அன்னோர் இயற்றிய நூல்களுள் சிறியதும், அரியதுமாகிய இந்த **அநுபவஸாரம்** என்னும் நூலை யான் முதலில் மொழிபெயர்ப்பான் துணியலானேன். நிஜகுண சிவயோகிகள் அருளிய நூல்களில் **விவேகசிந்தாமணி** முன்னரே தமிழில் வெளிவந்துள்ளது. ஏனைய நூல்களையும் வெளிப்படுத்த விரும்புகிறேன்.

அத்வைதமென்பது இத் தமிழ் நாட்டினர்க்குத் தெரிந்ததொன்றாம். ஆதலின், ஈண்டு வீரசைவ சமயத்தைப் பற்றிச் சிறிது கூறுவாம்.

வட தேசங்களிலும், மத்தியப் பிரதேசங்களிலும் உள்ளவர்கள் லிங்கவந்தர் என்றும், சீலவந்தர் என்றும், லிங்காயத்தர் என்றும், சிவாசாரத்தார் என்றும், கன்னடியர் என்றும், வீரசைவர் என்றும் பலவாறு வழங்கப்பட்டு வருகின்றனர். வேத பாஷ்யங்களிலும், சிவாகமங்களிலும், புராணங்களிலும், சித்தாந்த நூல்களிலும் சிவாத்வைதம், ஶக்தி விஶிஷ்டாத்வைதம், வீரஶைவம் என்னும் பிரயோகங்கள் இருக்கின்றன. இம் மூன்று பெயர்களும் ஒருபொருளைத் தருவனவாம். வேதம், உபநிஷத், ஆகமம் ஆகிய இவைகளையே தழுவிய சித்தாந்த சிகாமணி முதலிய நூல்களில் பிரதிபாதிக்கப்படும் வீரசைவம் யாதோ, அதுவே சிவாத்வைதம் முதலிய பெயரினால் வழங்கப்படுவதாம். ஆதலின், வீரசைவம் அநாதியென்பது பெறப்படும். சைவ சமயாசாரியர் மூவராவது, மாணிக்கவாசகப் பெருமானாவது, ஏனைய சமயத்தாராவது வீரசைவசமயத்தை ஏனைய சமயத்தைக் கண்டிப்பது போலக் கண்டித்திருப்பதாக அவர்கள் இயற்றியுள்ள தேவாரம், திருவாசகம், திருவாய் மொழி, வேதாந்தம் முதலிய நூல்களில் கண்டேயில்லை. சிலர் மாணிக்கவாசக சுவாமிகளை வீரசைவரென்று கருதுகின்றனர். இதைப் பற்றி ஓர் நூல் விரைவில் வெளிப்படும். வடநாட்டில் வீரசைவ சமயம் பெரும்பான்மையாய்ப் பரவியிருக்கிறது. வீரசைவ சமயத்தைத் தாபிக்கவும், உத்தாரணஞ் செய்யவும் முறையே வீரசைவ சமயாசாரியர்களாகிய ஸ்ரீ ரேணுகாசாரியர் ஆதியாக ஐவரும், தருமப் பிரபுவான வசவண்ணரும் அவதரித்தார்கள். இதற்கு வடதேசத்தில் தொன்றுதொட்டிருந்து வருகின்ற பேர்பெற்ற வீரசைவ சிம்மாசனங்களே போதிய சான்றாம். தென் நாட்டிலுள்ள வீரசைவர்கள் வட நாட்டிலுள்ளவர்களை நோக்க, மிகக் குறைந்த தொகையினராயிருப்பதனாற்றான் வீரசைவ சமயம் நன்கு விளங்கி விருத்தியடைய இடமில்லாமற் போயிற்று. ஆயினும், குடந்தை, மதுரை முதலிய திவ்ய ஸ்தலங்களில் புராதன வீரசைவ மடங்களை இன்றும் காணலாம். இவற்றை நோக்குமிடத்து. முன்னொரு காலத்தில் இப் பாதகண்டமெங்கும் வீரசைவ சமயம் பரவியிருந்ததாகத் தெரிகிறது. இந்தத் தமிழ்நாட்டில் முக்கியம் சேலம் முதலிய பிரதேசங்களில் சிவலிங்கம் மாத்திரம் தரிப்பவர்களையும், இத்துடன் * குடியும் † கடியுமுடைய துராசாரிகளையும் வீர

---

* மதுபானமும் † என்போடுகூடிய மாம்ஸ போஜனமும்

சைவ ஜங்கமரென்று வழங்கவேண்டு மென்னும் கருத்துடன் ஒரு சிறு பண்டாரக் கூட்டத்தார் வெளிவந்து சபை கூடிப் பிரசாரஞ் செய்து அறிக்கைப் பத்திரம் வெளியிட் டிருக்கின்றார்கள். மேலும், அதில் இவர்கள் பண்டாரம் என்னும் சொல் வடமொழி யென்றும், பகாப்பத மென்றும் உணராது, பகுபதமாக்கிக்கொண்டு, பண்டு + ஆரம் எனப்பிரித்து, பண்டு = உருத்திராக்கம், ஆரம் = மாலை யென்று அனார்த்தம் செய்து, உருத்திராக்க மணி மாலையை அணிந்துள்ள இவர்கள் சிவ பக்தரென்று அன்வயித்து, நல்லோர்களையும் மருட்டி விடலா மென்று மயக்கம் கொண்டுள்ளார் போலும். இவ் வபிப்பிராயம் முற்றிலும் வழுவும், அதி பாதகமுமாம். இப் பண்டாரத்தார் வீரசைவ ஜங்கமரென்று கூறுதலினால், வீரசைவரல்லாத ஜங்கமர் உண்டோ என்னும் ஸங்கை நிகழுமாயின், கூறுதும். வீரசைவர்கள் நித்திய கடனாக வழிபடுகின்ற கடவுளர் குரு லிங்க ஜங்கமர்களே யாவர். இவர்களுக்கு வீரசைவம் என்னும் அடைமொழியே இல்லை. தாம் இம்மூவருள் ஒருவராகிய ஜங்கமரைச் சேர்ந்தவர்களென்று இப் பண்டாரத்தார் சொல்லத் துணிவரோ? ஒருகாலும் துணியார். அப்படியிருக்க, இவர்கள் வீரசைவ ஜங்கமரென்று மனங்கூசாது வாய்ப் பறை யடிப்பதேன்? ஆனால், இவர்கள் யாரோ வெனின், வீரசைவரல்லாத சங்கமர் ஸையராம் சங்காளிகளே யாவர். வேதாகமோக்தமான சித்தாந்த சிகாமணி முதலிய நூல்களிற் கூறியபடி நல்லொழுக்கத்தை வழுவாது கடைப்பிடித்துள்ள வீரசைவ பரம்பரையிலுதித்தவர்களும், குரு லிங்க ஜங்கம பக்தர்களும் வீரசைவ ரெனப்படுவர். அன்றி, ஏனையோரை வீரசைவ ரென்றாவது, ஜங்கமரென்றாவது, வீரசைவ ஜங்கம ரென்றாவது ஆராய்ச்சியின்றி வழங்குவது தகாது. ஆனால், இவர்கள் வீரசைவரல்லாத ஜங்கமர்கள் (பூசாரர்கள்) எனப்படுவர். பண்டாரத்தாரைப் பற்றி, கோயமுத்தூர் ம-ா-ா-ஸ்ரீ சி. கு. நாராயணசாமி முதலியார் அவர்கள் வெளியிட்ட பழநிஸ்தல மகத்துவம் என்னும் நூலில் இவ்வாறு எழுதியுள்ளார்:—

“ பழநிக் கோயிலும்—பண்டாரங்களும். பண்டாரம், பண்டாரத்தார், பண்டாரி, ஜங்கமர்கள், ஆண்டிகள் என்று பெயர்கள் இவர்களுக்குத் தமிழகத்தில் இயற்பெயராகவும், காரணப்பெயராகவும், சிறப்புப் பெயராகவும் வழங்கி வருவதற்கு, உலக வழக்கிலும், நூல் வழக்கிலும் போதிய ஆதாரங்களிருக்கின்றன. பண்டாரம்—என்பதற்கு

மடாதீனத்தான், பொக்கசம், பொக்கிஷசாலை, பலபண்டம் என்பன பொருளாமென்று தமிழ் அகராதிகளிற் கூறப்பட்டுள் ளன. பண்டாரத்தார்—என்பதற்கு சிவசந்நிதானத்திற்குரிய அரும் பொருள்களைப் பாதுகாக்கும் உரிமையுடையார் என்றும் (இப் பொழுது இவர்கட்குப் பழனிமலைக் கோயிலில் அறை காக்கும் தொழில் இருப்பது இவ் வுண்மையை உறுதிப்படுத்துகின்றது.) பண்டாரி—என்பதற்கும் இதுவேபொருள். ஜங்கமர்கள்—என்பதற்கு சிவசின்னங்களணிந்த சைவத்துறவிகள் என்றும், ஆண்டி—என் பதற்கு சிவனடியான் என்றும் பொருளாகின்றன. இம் மரபினர் பாம்பரைச் சைவர்களாகவும், சிவபூஜா துரந்தரர்களாகவும், தேவா ரம், திருவாசகம் முதலியவற்றை இசையுடன் ஓதுவதில் வல்ல வர்களாகவும், புராணப் பிரசங்கஞ் செய்வதிலும், தமிழ்க்கவி பாடு வதிலும் சிறந்தவர்களாகவும் சிவாலயங்களில் சிவ தொண்டிற் குரிய திருப்பணிகளைச் சித்த சுத்தியாய்ச் செய்துவரும் சிவ நேசர் களாகவும் தென்னாட்டிற் பற்பல பகுதிகளில் விளங்கி வந்தார்கள்."

இப் பண்டாரத்தார் சிலவிடங்களில் தேவாங்கர் என்றும், தேவர் என்றும் வழங்கப்படுகின்றனர். இவர்களுள் தமிழரும், தெலுங்கரும், கன்னடியரும் இருக்கின்றனர். இவர்கள் பெரியோர்களை யடுத்து, சாத்திரப்படி உபதேசம் பெற்று, அடங்கித் தன்யராக எல்லாம் வல்ல இறைவனை வணங்குகின்றேன்.

சென்னை,
1—9—1933.

S. C. நாகிசெட்டியார்.



## பொருளடக்கம்

### 1-வது அதிகாரம்



### 2-வது அதிகாரம்



### 3-வது அதிகாரம்



### 4-வது அதிகாரம்

## 5-வது அதிகாரம்



## 6-வது அதிகாரம்



## 7-வது அதிகாரம்



## 8-வது அதிகாரம்

உ

சிவமயம்

# அநுபவஸாரம்



## 1 - வது அதிகாரம்

### 1-ம் சூத்திரம்—இஷ்டதேவதா நமஸ்கார நிரூபணம்

[மிகவும் மேன்மையான ஆநந்தவடிவினராகிய ஜகத் குருவான ஸம்புலிங்க ஸ்வாமிகளின் திருவடித்தாமரைகள் உண்மையான தயவுடன் என் சிரத்தின்மேலிருப்பனவாக.]

1. ஷட்குண ஐஸ்வர்ய ஸம்பன்னரான ஆசாரியனே! நிஜானந்த ஸமுத்ரமாகிய உம்மிடத்து எக்காலத்திலும் உயர்ந்தெழுந்து பிரகாசிக்கும் அலைகளாகிய உமது கடாக்ஷங்கள் எல்லார்க்கும் சந்தோஷத்தைக் கொடுப்பதாக.

2. உலகத்துக்கு மூலகாரணனுகவும், வேதாந்தமென்னும் உபநிஷத்துக்களினுல் அறியத்தக்கவனுகவும், மலையரையன் திருமகளான பார்வதீ தேவிக்குத் தலைவனுகவு மிருக்கும் சிவபெருமானை அளவிலா மகிழ்ச்சியுடன் வணங்குகின்றேன்.

3. சிவபெருமானுக்கு விஷயங்களை யெல்லாம் அறியுந் தன்மையும், எல்லாவற்றிற்கும் அதிபதியாயிருக்குந் தன்மையும், ஆத்மாவாகுந் தன்மையும், எல்லாஞ் செய்யவல்ல தன்மையும் யாருடைய சக்தியினுலுண்டாகின்றதோ, அந்தப் பார்வதீ தேவியை வணங்குகின்றேன்.

4. விநாயகக் கடவுளையும், ஆறுமுகக் கடவுளையும், வீரபத்திரக் கடவுளையும், நந்தியெம்பெருமானையும் நான் அன்புடன் வணங்குகின்றேன்.

5. இறந்தகாலத்திலும், நிகழ்காலத்திலும், எதிர்காலத்திலும், எக்காலத்திலும், இடைவிடாது உண்மையான பக்தியினுல் சிவத்தில்

ஐக்யமடைந்து சுகித்திருக்கும் சிவனடியார் திருக்கூட்டத்தை வணங்குகின்றேன்.

6. எந்தப் பரம்பொருள் தன்னை யொரு முறை யறிந்தவர்க்கு இதனினும் உயர்ந்த சுகம் இல்லை யென்னும்படியான சுகத்தைத் தயவுடன் பாலிக்கிறதோ, அந்தப் பரம்பொருள்' இதயத்தில் நிலை கொள்க.

—: o :—

## 2-ம் சூத்திரம்—நூல் நிலைமை நிரூபணம்

[இந்த நூலில் எல்லா உபநிஷத்துக்களின் முக்கியாமிசங்களை யும் அப்பியாசிகள் அறியுமாறு அன்புடன் கூறுகின்றேன்.]

1. வேதத்தையே ஸ்மரித்து ருஷிகள் ஓதிய அற்புதமான வசனம் ஸ்மிருதியென்று உலகத்தில் பிரசித்தமடைந்து, அனைவரும் ஒத்துக்கொள்ளத்தக்கதாயி ருப்பதனால் அந்த வேதமே அனைவர்க் கும் பிரமாணமாம்.

2. அந்த வேதத்தில் பின்பாகம் உபநிஷத்தெனப்படும்; அதில் ஸாரமான வித்தை யிருப்பதனால் அந்த உபநிஷத் விசாரணையினால் மோக்ஷம் உண்டாம்.

3. மனிதனுக்கு அநாதியான (ஆதியில்லாத) அவித்தை யென்னும் அஜ்ஞானத்தை யொழித்து முக்தியைத் தருகின்ற உபநிஷத்தின் பொருளே வித்தை யாம்; மற்றவை வித்தை யாகா.

4. இங்ஙனம் இருப்பதனால் ஸத்புருஷர்கள் உபநிஷத்துக் களின் பொருளை யறிந்து, மோக்ஷத்தை யடைதல் வேண்டும். இது வேதாந்த விஜ்ஞான முதலிய ஶ்ருதி வாக்கியங்களினால் பெறப்படும்.

### ஶ்ருதி ப்ரமாணம்

வேதாந்த விஜ்ஞான ஸுநிஸ்சிதார்த் தாஸ்
ஸந்யாஸ யோகாத்யத யஶ்ஶுத்த ஸத்வா: ।
தேப்ரஹ்மலோகேது பராந்தகாலே
பராம்ருதாத் பரிமுச்யந்தி ஸர்வே ॥

5. உபநிஷத்துக்களின் ரஹஸ்யமான பொருளை யெடுத்து ப்ரஹ்ம ஜ்ஞானிகள் செவிகொடுத்துக் கேட்கும்படி த்ரிபதி யென் னும் மூவடிப் பாசுரங்களாம் இந்த நூலை யியற்றுகின்றேன்.

6. ஆத்ம ஜ்ஞானிகள் இந்த நூலுக்கு அநுபவஸாரமென்னும் பெயரைச் சந்தோஷத்துடன் சூட்ட, அப்பியாசிகளின் மனதிற் பதியுமாறு கூறுகின்றேன்.

7. (பாஹ்யாந்தர) வ்யாபாரங்களினுல் தேகத்துக்குக் கஷ்டத்தை யுண்டாக்கத் தக்க கர்மம், யோகம் முதலிய பூர்வ சாதனங்கள் முன்னரே இவ் வுலகத்தில் பிரசித்தமாயிருப்பதனுல் அவைகளை இவ்விடம் நான் கூறவில்லை.

8, 9. அநுபவஸாரமென்னும் இந்த வேதாந்த சாத்திரத்திற்கு மனோகரமான ஆத்மாநந்தமே பயனென்றும், ஜீவேஶ்வர ஸ்வரூப ஐக்யமென்னும் அத்வைதமே விஷயமென்றும், ஸமாதி குண ஸம்பன்னனுன நற்சீடனே அதிகாரியென்றும், பரமாத்மாவே பிரதிபாத்தியமென்றும், அநுபவஸார மென்னும் இந்த நூல் பிரதிபாதகமென்றும், இதன் பொருளை ப்ரஹ்மத்தில் அநுபந்திப்பதே சம்பந்தமென்றும் அறிதல் வேண்டும். இந்த நூலுக்கு அதிகாரி, சம்பந்தம், விஷயம், பயனென்னும் அநுபந்த ஸதுஷ்டயமி ருப்பதனுல் இது சாத்திரமென்று பெரியோர்கள் கொள்ளத் தக்கதாம்.

10. குணவான்கள் இந்த நூலில் இலக்கணப் பிழைகளின்மேல் கவனம் செலுத்தக் கூடாது; ஏனெனின், அன்னப்பறவை நீர் கலந்த பாலை அருந்தாது விடுமோ? நீர் கலந்த பாலை அன்னப்பறவையின் முன் வைப்பின் அது நீரை நீக்கிப் பாலையே குடிப்பது போல ஸத் புருஷர்கள் இந்த நூலில் காவியக் குற்றங்களிருப்பினும் அவற்றைப் பாராட்டாது, முக்கியமான விஷயத்தையே கொள்ளுதல் வேண்டும்.

11. இந்த நூலின் அபிப்பிராயமே முக்கியமாம். இது சொல்லடுக்கு, எதுகை, மோனை முதலியவைகளில்லாதி ருப்பினும், ஆபரணங்களைக் கழற்றிக் கலவியை விரும்பிவரும் பெண்ணைப் போல மனோகரமாகவே யிருக்கும்.

12. சிவஜ்ஞானிகள் இந்த நூலைப் படிக்கும்போது, ஏதாவது தமது அநுபவத்திற்கு விருத்தமான விஷயம் காணப்படுமாயின், அதைத் தயவுடன் திருத்தித் தெரிவித்தல் வேண்டும்.

13. குழந்தை மழலைச் சொற்களால் குழறிப் பேசின், அறிவுடையோர் அந்தச் சொற்களில் குற்றத்தை நாடாதிருப்பது போல,

இந்த நூலில் எவ்விதமான குற்றம் காணப்படினும் ஆத்மாநந்தத்தை யநுபவிக்கும் ஞானிகள் அந்தக் குற்றத்தை மன்னித்தல் வேண்டும்.

14. முன்னுள்ள வேதாந்த நூல்கள் சந்தோஷத்தை யுண்டாக்கும்போது, இந்த நவீன செய்யுட்களினால் பயன் என்னை என்று ஆலோசியாது, செவிகொடுத்துக் கேட்டல் வேண்டும். ஏனெனின், மாலைக் காலத்தில் நிலாவெளிச்சமி ருக்கையில் தீபத்தை விரும்பா திருப்பவர் யாவரேனும் உளரோ ?

15. இந்த நூல் ஶ்ருதி, ஸ்மிருதிகளுக்கு விரோதமில்லாதிருப்பதனால் இதனை அரசன் சம்மதத்தினால் எழுதப்பட்ட அரசசாதனத்தைக் கேட்பது போல நன்றாய்க் கேட்கவேண்டும்.

16. மிகவுமேலான பரப்ரஹ்மமே தன் ஸ்வரூபமென்று குருபதேசத்தினால் தன் உண்மை நிலைமையை யறிந்த நிஜகுண சிவயோகி இந்த நூலை யியற்றினான்.

—: o :—

## 3-ம் சூத்திரம்—வினா நிரூபணம்

[ஆசாரியர் பூரணாநந்தத்துடன் பிரகாசித்துக் கொண்டிருக்கும் போது ஓர் சீடன் வந்து அன்புடன் வணங்கி வினவினான்.]

1. தயை, தேஜஸ், சாத்திர ஞானம், வைராக்கியம், சௌந்தரியம், சாந்தம், சற்குணம், ப்ரஹ்ம ஜ்ஞானம் ஆகிய இந்தக் குணங்களுள்ளவனே சேவிக்கப்படுதற்கு யோக்கியனான குருவாகின்றான்.

2. குருவினிடத்திலும், கடவுளிடத்திலும் அன்பு செய்தல், வேதவிதிப்படி ஒழுக விரும்புதல், இலௌகிக விஷயங்களை யநுபவித்தலை வெறுத்தல் முதலிய நற்குணம், நன்னடக்கையுள்ளவனே நற்சீடனென்று சொல்லப்படுகின்றான்.

3, 4. அத்தகைய குருவானவர் ஓர் நாள் சிவயோகிகளின் திருக்கூட்டத்துடன் கூடிச் சந்தோஷத்துடன் எழுந்தருளியிருக்கும் போது அத்தகைய சீடனொருவன் வந்து தெரிசித்து, இரண்டு கால்கள், இரண்டு கைகள், இரண்டு புயங்கள், மார்பு, நெற்றி யென்னும் எட்டு அங்கங்களும் பூமியிற் படும்படி அவரை வணங்கி, உத்தம-

குருஸ்வாமியே! அடியேன் மீது கிருபை செய்யுங்கள் என்று விண்ணப்பித்தனன்.

5. மேலும், அந்தச் சீடன் குருபாதங்களைத் தலைமேற்றாங்கி சந்தோஷத்தினால் கைகளைக் குவித்துக்கொண்டு, தோத்திரஞ் செய்து, பன்முறை புகழ்ந்து வினவினான்.

6. குருவே! அடியேனுடைய விண்ணப்பத்தைக் கேட்டருள் வீராக. அநேக விதமாகத் தோன்றும் இந்த உலகமென்பது என்னை? இது எவ்விடத்திற் றோன்றி இவ்விதமாய்க் காணப்படுகின்றது?

7, 8. இந்த உலகத்தைச் சிலர் அஸத்தென்றும், சிலர் ஸத்தென்றும், சிலர் ஆதியிலிருந்து இருப்பது தெளிந்த பிறகு இல்லாமற் போவதென்றும், சிலர் இதைக் குறித்துச் சொல்லுவது அசாத்திய மென்றும் கூறி, வெவ்வேறு அநுமான ப்ரமாணங் களினாலும், வெவ்வேறு யூகங்களினாலும், வெவ்வேறு நியாயங்களி னாலும் சாதிக்கின்றார்கள்.

9. அடியேன் இந்த உலகத்தை என்னென்று அறிந்துகொள் வேன்? என்னென்று நம்பிக்கை வைத்துத் தியானிப்பேன்? தத்துவார்த்தத்திற்கு உறைவிடமாயுள்ள குருவே! இந்த விஷயத்தை அடியேனுக்கு விளங்கச் சொல்லுவீராக.

—: o :—

## 4-ம் சூத்திரம்—சித்விவர்த்தன நிரூபணம்

[ஒன்றே யொன்றாய் இரண்டாவதில்லாத ப்ரஹ்மத்தில் காணப் படும் பரந்த இந்த வுலகம் கற்பனையினாலான தன்றோ?]

1. மகனே! கேட்பாயாக. நீ சொல்லுவது உண்மையே. நீ இப்போது கேட்ட வினா நன்றாயிருக்கின்றது. இப்போது உன் மனதில் உண்டான சந்தேகம் நீங்குமாறு சொல்லுகின்றேன்.

2. இதனை எவன் அறியினும் அவன் ஜனனமரண ரூபமான இந்த ஸம்ஸாரத்தைக் கடந்து, சந்தோஷத்துடன் யாதொரு களங்கமுமில்லாத முக்தியை யடைவான். அங்ஙனமே அதை யறியும் விதமாய்ச் சொல்லுகின்றேன்.

3. ஸத்ய ஜ்ஞானானந்த ரூபமாகியும், எவ்விடத்திலும் நிறைந்துள்ளதாகியும், விகற்பமில்லாததாகியும், மிகச் சிறந்ததாகியும், தனக்கு ஒரு காரணமில்லாததாகியு மிருக்கும் பரப்ரஹ்மம் ஒன்று உண்டு.

4. உண்டு என்றும், இல்லை யென்றும், உண்டில்லை யென்றும் சொல்லப்படாததாயும், துக்கங்களுக்கெல்லாம் மூலகாரணமாயும் அநாதியாயுமுள்ள அவித்தை யென்பது பரப்ரஹ்மத்தில் இருப்பினுடன் சேர்ந்து விளங்குகின்றது.

5. ஓ சீடனே! அந்த ப்ரஹ்மமே ஆதாரம். அவித்தை யென்னும் மாயையே ஆதேயம். ஆதேயமானது ஆதாரத்திற் சேர்ந்து வேறானதென்று சொல்லப்படாத தாயிருக்கும்.

6. தேவாத்ம ஶக்திம் என்னும் வேதவாக்கியத்தை விசாரணை செய்து, அவித்தையானது ப்ரஹ்மத்திற் சேர்ந்து பின்னமாயில்லை யென்னும் பொருளைத் தெரிந்துகொள்.

ஶ்ருதி ப்ரமாணம்

தேவாத்ம ஶக்திம் ஸ்வகுணைர் நிகூடாம பின்னும்
ஜ்ஞாத்வாவித்வாநம்ருதத்வமேதி.

7. ஒன்றை யொன்று விட்டு நீங்காதிருக்கும் இந்த ப்ரஹ்ம மாயைகளில் யாதொரு காரணமுமில்லாத உலகம் நிர்மிமித்தமாய்க் காணப்படும் ஸ்வப்னத்திற்குச் சமானமாயிருக்கிறது.

8. விசாரிக்குமிடத்து, ஆதாரமாயிருக்கும் ப்ரஹ்மம் ஒன்றே ஆதேயமான மாயையில் காணப்படுவதென்னும் உபாதியினால் உலகம், ஜீவன், ஈஶ்வரன் என்னும் இந்த மூன்று வடிவமாக விளங்குகின்றது.

9. இங்ஙனம் கூறின், ஆதேயமான மாயைக்கு ப்ராப்தமான விகார வாதையினால் ஆதாரமான ப்ரஹ்மத்திற்கும் வாதையுண்டாகு மல்லவா என்னும் ஸங்கை நிகழுமாயின், அதைப் பற்றிச் சொல்லுகின்றேன்; கேள்.

10, 11 வெயில் தன்னிடத்தில் ஆதேய ரூபத்தினாலுண்டாகிப் பிரவகிக்கின்ற நதியினால் நனைக்கப்பட்டுக் குளிர்ந்ததென்று சொல்லப்

படினும், ஆதார ரூபத்தினால் விகாரமடையாமல் நிலைத்திருப்பது போல, பரப்ரஹ்மம் தன்னிடத்திலுள்ள அஸத்தான மாயைக்கு அநேக விகாரங்கள் சம்பவிக்கினும், தான் சுத்தமாயிருக்கும் காரணத்தினால் அந்த மாயாவிகாரங்களினால் வாதை அடைவதில்லை.

12. பரப்ரஹ்மம் தான் விகாரமடைவதில்லை; விசாரிக்குமிடத்து, மாயையே விகாரமடைகின்றதென்பது எங்ஙனம் என்று வினவினால் அதைப் பற்றி விவரமாய்ச் சொல்லுகிறேன்; கேள்.

13. அநிர்வசனமான மாயைக்கு ஆதாரமாயிருக்கும் பரப்ரஹ்மம் தனக்கு இலேசமாயினும் கெடுதியில்லாமலே தானே இந்த ஸகல ப்ரபஞ்சமாய்க் காணப்படுகின்றது.

14. உலகம் ப்ரஹ்மத்தின் ரூபாந்தரம்; என்றால், ப்ரஹ்மமே உலகமாய்க் காணப்படுகின்ற தென்பது பொருள். இந்த அபிப்பிராயமே ஸர்வமாத்மா என்னும் பிரசித்தமான ஶ்ருதியின் அபிப்பிராயம். இவ் வர்த்தத்தைக் கயிற்றரவின் திருஷ்டாந்த வாயிலாய் நிச்சயித்துக் கொள்.

ஶ்ருதி ப்ரமாணம்

ஸர்வ மாத்மைவ நான்யதே ததஸ்தி

15. மேலும், கேட்பாயாக. பிரசித்தமான பொன் தன் ஸ்வபாவத்தை விடாது, கடகம் முதலான பூஷணத்தின் உருவத்தை யடையினும், அந்தப் பூஷணம் பொன்னின் ரூபாந்தரமா யிருப்பதல்லாமல் பொன்னினும் வேறாகாது; அங்ஙனமே ப்ரஹ்மம் உலக ரூபமாயிருப்பதனால் உலகம் ப்ரஹ்மத்தினும் வேறாகாது.

16. இவ்வாறிருப்பதனால், ஓ சீடனே! இவ் வுலகம் ப்ரஹ்மத்தின் ஆதாரத்தினாலே அநேக விதமாய்க் காணப்படுகின்றது. இது வேதாந்தத்தில் நிர்ணயிக்கப்பட்ட பொருளாம்.

17. இவ்வாறாகவே, உலகம் ஸத்யமன்று; அறியும் வரையிலும் ஸத்யம் போலக் காணப்படுகின்றது. விசாரிக்குமிடத்து, இவ் வுலகம் பரப்ரஹ்மமாகவே யிருப்பதன்றி ப்ரஹ்மம் உலகமென்று இரண்டு பொருள்கள் இருக்கின்றனவோ?

—: O :—

## 5-ம் சூத்திரம்—வினா நிரூபணம்

[காணப்படும் இவ் வுலகத்தை ப்ரஹ்மத்தின் ரூபாந்தரமென்று என் சொல்லவேண்டும்? மாயாஸ்வரூபமென்று சொல்லவொண்ணாதோ?]

1. சீடன் ஸ்ரீ குருவின் பாததுளியில் தாமரைமலரின் இனிமையிற் களிக்கும் வண்டு போல மிக விருப்பங்கொண்டு வணங்கி மறுபடியும் நன்றாய் வினாவினான்.

2. ஓ! குருஶ்ரேஷ்டரே! கேட்டருளும். (தயிலம், வர்த்தி முதலிய) உபாதியில்லாமல் பிரகாசிக்கும் ஜ்யோதியும், தன்னினும் உயர்ந்ததொன் றில்லாததும், அழியாததும், ஸத்யமானதும், மறைப்பில்லாததுமாயி ருக்கும் பரப்ரஹ்மத்தை உலகமென்று என் சொல்ல வேண்டும்?

3. குருநாதரே! ஸத்ரூபமான அந்த மாயை இந்த ஸர்வ உலகமாய்த் துன்பப்படுகிறதென்று சொன்னால் குற்றம் என்னை? இன்னொரு விண்ணப்பம்; கேட்டருளும்.

4. அநித்ய, ஜட, துக்க ரூபமான இவ் வுலகத்தை ஸத்ய ஞானானந்த ஸ்வரூபமான பரப்ரஹ்மமென்று தேவரீர் திருவாய்மலர்ந்தீர்களன்றோ? அது சரியல்லவே.

5. தேவரீர் அருளிச் செய்தவாறு, இந்த உலகமே பரப்ரஹ்மமாயின், ப்ரஹ்மத்திற்கு எங்கெந்த விகாரத்தையும், எங்கெந்த கேட்டையும் சொல்ல நேரும்? குருநாதரே! இதனை நன்றாய் விளக்கியருளல் வேண்டும்.

—: o :—

## 6-ம் சூத்திரம்—விவர்த்த விசேஷ நிரூபணம்

[ஸத்யமானதென்று சொல்லப்படும் உலகத்தின் உபாதான காரணம் வேறொன்றில்லாததனால் இவ் வுலகத்தை ப்ரஹ்மத்தின் ரூபாந்தரமென்று சொல்லவேண்டும்.]

1. ஓ மகனே! கேள். உன்னுடைய நேர்த்தியான ஆக்ஷேபத்திற்கு நான் தகுந்த பரிகாரத்தைச் சந்தோஷத்துடன் சொல்லுகின்றேனென்று அனைவர்க்கும் காணுதற்கு எளியரான குரு பின் வருமாறு அருளிச்செய்தார் :—

2. உண்மையில் பரப்ரஹ்மம் ஒன்றை யன்றி நிலைத்திருக்கத் தக்க வேறு எதையும் அறியாத காரணத்தினால் அந்தப் பரப்ரஹ்மமே உலகமாயி ருக்கிறதென்று சொல்லவேண்டும்.

3. பரப்ரஹ்ம மன்றி மற்றொரு பொருள் ஸத்தாய்க் காணப்படுகின்றதென்று சொல்லப்படுமாயின், வேதம் கூறுகின்ற அத்வைத ஸித்திக்குத் தூஷணையுண்டாவதனால் ப்ரஹ்மத்தை விட வேறேது மில்லை.

4. ஆனால், இந்த உலகத்துக்கு உண்டான விகாரங்களினால் அநாதியான ப்ரஹ்மத்திற்கு வாதையில்லையோ என்று நீ சந்தோஷத்துடன் கேட்பாயாயின், சொல்லுகின்றேன்.

5. சங்கிலிக்குச் சர்ப்பத்தின் உற்பத்தி நாசங்களென்னும் விகாரங்கள் இல்லையாயினும், அந்தச் சர்ப்பம் அந்தச் சங்கிலியிலுண்டானவாறு ப்ரஹ்மத்திற்கு உலகத்தின் விகாரமில்லை யாயினும், ப்ரஹ்மத்தை யாச்ரயித்து உலகம் இருப்பதன்றோ ?

6. இங்ஙனம் கூறப்படுமாயின், ப்ரஹ்மம் ஒன்றே உள்ளது ; இரண்டாவது பொருள் இல்லை யென்று சொல்லப்பட்டதாம். அங்ஙனமாயின், அந்த ப்ரஹ்மம் விகாரமில்லாதிருப்பதனால் ஸவிகல்ப ஜ்ஞானம் யாருக்கு உண்டாகின்றதென்று சொல்லலாம் என்னும் ஸங்கை நிகழுமாயின், நான் சொல்லுகிறேன் ; கேள்.

7. ஜிதேந்த்ரியனுக்கு ஒரு வேளை ஸ்வப்னத்தில் தான் கணவனாயிருப்பது போலவும், தனக்கு ஒரு மனைவி யிருப்பது போலவும், அவளிடத்தில் தனக்குக் கலவி விருப்பம் உண்டானது போலவும் தோன்றுமாயினும், அந்த மோஹத்தின் வாதை உண்மையில் அவனுக்கு எங்ஙனம் இல்லையோ, அங்ஙனமே ப்ரஹ்மத்தில் ஸவிகல்ப ஜ்ஞானமுண்டாயினும், அதன் வாதை ப்ரஹ்மத்திற்கில்லை.

8. அறிவு, அறியப்படும் பொருள், அறியும் இந்த்ரியம் ஆகிய இவை யாவும் மித்தை யாம். இவ்வாறான ஞானம் ஒரு காலத்தில் தோன்றியதாயின், அவ் வுண்மை ஞானத்திற் சற்றேனும் பிராந்தியில்லை.

9. ததேததோம் என்று ஶ்ருதி கூறும் காரணத்தினால் ஞாதரு, ஞானம், ஞேயமென்னும் திரிபுடி ஸத்யமல்ல.

ஶ்ருதி ப்ரமாணம்

*தத்தேதம் ஏகமேவ ஜ்ஞாத்ராதி வர்ஜிதம்*

10. *அங்ஙனமாயின், அஸத்யரூபமான இவ் வுலகம் இவ் விதமாய் நெடுநாள் நிலைத்திருப்பது எங்ஙனம் என்று ஸங்கை நிகழுமாயின், இதனை த்ருஷ்டி ஸ்ருஷ்டி க்ரமத்தில் சொல்லுகின்றேன்; கேள்.*

11. *நிமிஷநேரமிருக்கும் ஸ்வப்னத்தில் அநேக காலம் நடக்கும் உற்சவாதிகள் எங்ஙனம் தோன்றுகின்றனவோ, அங்ஙனமே இவ் வுலகம் நிர்மலமான ப்ரஹ்மத்தில் நெடுநாள் நிலைத்திருப்பது போலத் தோன்றும்.*

12. *முன்னில்லாத உலகம் இவ் விதமாய்க் காணப்படுகிறது. இந்தப் பொருளை நதத்ரா முதலிய வாக்கியத்திலும், அத ஏவாத்ர வாக்கியத்திலும், வேதாந்த போதையும் முறையிடுகின்றது.*

ஶ்ருதி ப்ரமாணம்

*நதத்ராதௌ த்ருஶ்ய மிதமாஸீதேகமேவஸத் ॥*
*அத ஏவாத்ர ஆஸீன் ஜன்யத் கிஞ்சன ॥*

13. *ஓ மகனே! த்ருஷ்டி ஸ்ருஷ்டி க்ரமத்திற்கு இவ் வேத வாக்கியங்களே பிரமாணமாம். ஆத்மா தானே ஸமஷ்டிரூபமான உலகமாயிற்று; இது மேலோர் கொள்கை யென்று அறிந்துகொள்.*

—: o :—

7-ம் சூத்திரம்—வினா நிரூபணம்

[*காரணத்திலிருக்கும் குணம் காரியத்தை விடாது பற்றிக் கொண்டு காணப்படவேண்டும்.*]

1. *சீடன் மறுபடியும் குருவின் பாதகமலங்களை வணங்கிக் கைகுவித்துத் துதித்து, மனத்தில் இடைவிடாது ஆநந்த முண்டாய்க் கொண்டிருக்க விண்ணப்பஞ் செய்தான்.*

2. *ஸ்வாமி! ஜடமான மண்ணிலிருந்து உண்டான கடம் முதலிய காரியங்கள் ஜடப் பொருள்களாகவே யிருப்பது போலச் சித்திலிருந்து உண்டான உலகம் ஜடமாகக் கூடாதன்றோ?*

3. நீரின் குணம் நுரையிலும், நெருப்பின் குணம் தீபத்திலும், வாயுவின் குணம் பிராணத்திலும் இருப்பது போல ப்ரஹ்மத்தின் குணமே உலகத்தில் இருக்கவேண்டும்.

4. ஓ குருஸ்ரேஷ்டரே! தேவரீர் தங்களுக்கு இயல்பான கருணையுடன் இந்தச் சந்தேகம் நிவர்த்தியாகுமாறு உண்மைப் பொருளை யருளிச்செய்து அடியேனைக் காக்கவேண்டுமென்று சீடன் வணங்கினான்.

—: 0 :—

## 8-ம் சூத்திரம்—விவர்த்த மனனார்த்த நிரூபணம்

[ப்ரஹ்மம் உலகத்திற்கு உபாதான காரணமாயினும், விசாரணையில்லாததனால் உலகம் ஜடமாய்க் காணப்படுகிறது.]

1 ஓ புத்திசாலியான சீடனே! காரணத்திலிருக்கும் குணம் அதன் காரியத்திலிருக்க வேண்டுமென்பது நியமமன்று; ஏனெனின், பாலின் குணம் தயிரிலில்லை. பூவின் குணம் பழத்திலில்லை.

2. இந்த உலகத்திற்குச் சித்தே காரணமாயின் என்ன? இவ் வுலகம் அசித்தென்று கருதப்பட்டு வேறு ஜாதியாகவே காணப்படுகின்றது.

3. மகனே! கேள். இவ் வுலகம் மனத்தினால் ஜடமானதென்று எண்ணப்பட்டு, வேதத்தினாலும், அநுமான ப்ரமாணத்தினாலும் வேறு ந்யாயங்களினாலும் விசாரிக்குமிடத்து, ப்ரஹ்மமாயிருக்கிறதென்று சொல்லவேண்டும்.

4. சூரிய வெளிச்சம் அதிகரிக்கும் போது வீட்டிலுள்ள விளக்கு வெளிச்சம் முதலில் மந்தமாகக் காணப்பட்டுப் பின்னர் அந்தப் பெருவெளிச்சமே காணப்படுவது போல, மாயோபாதியான இவ் வுலகம் விசாரணையினால் பரமாத்மாவா யிருக்கிறதென்று பாவித்துக்கொள்.

5. பாலகனுக்கு மரத்தினாற் செய்த யானை உண்மையான யானையாய்க் காணப்பட்டிருந்து, அறிவு வந்த பிறகு மரமாகவே காணப்படுவது போல, அஜ்ஞான காலத்தில் உலகமாய்த் தோன்றுவது ஞானகாலத்தில் ப்ரஹ்மமாகவே யிருக்கும்.

6. ஆத்மா வென்னும் கடலில் உலகமென்னும் அலை பிறந்து அதிகரித்து, அந்தக் கடலிலேயே அடங்குவதனுல் இடையில் தோன்றும் இவ் வுலகம் ப்ரஹ்மத்தை விட வேறென்று எங்ஙனம் கொள்ளலாம்?

7. இந்த உலகம் ப்ரஹ்மத்திலும் வேருயில்லை; ஏனெனின், தோற்றமிருப்பதனுல், ஞானத்தைப் போல; இவ் விதமாய்ச் சொல்வதே அநுமான ப்ரமாணம்.

8. எப் பொருளாயினும் ப்ரஹ்மத்தை விட வேருயில்லை; ஏனெனின், அவ்விதமான உணர்ச்சியில்லாததனுல், ஆகாயத் தாமரையைப் போல; இவ் விதமாய்ச் சொல்வதே அநுமான ப்ரமாணம்.

9. இந்த உலகம் ப்ரஹ்மத்தை விட வேருனதாகச் சொல்லப்படுவதில்லை; ஏனெனின், ப்ரஹ்மமயமாய்க் காணப்படுதலினுல், மண்ணை விட வேறல்லாத கடத்தைப் போல; இவ்விதமாய்ச் சொல்வதே அநுமான ப்ரமாணம்.

10. யோசிக்குமிடத்து, இந்த உலகம் ப்ரஹ்மத்தை விட வேருயில்லை; ஏனெனின், உலகம் வேறொரு காரணமில்லாது தோன்றுகின்றது, ஸ்வப்னத்தைப் போல; இவ்விதமாய்ச் சொல்வதே அநுமான ப்ரமாணம்.

11. உலகம் ப்ரஹ்மத்தின் ரூபாந்தரமென்னும் விஷயத்தில் ஸதேவ ஸௌம்யே என்றும், ஆத்மை வேதம் என்றும், ஏகோய மாத்மா என்றும் வேத வாக்கியங்களிருக்கின்றன. ஒ சீடனே அறிந்துகொள்.

ஶ்ருதி ப்ரமாணம்

(1) ஸதேவ ஸௌம்யே தமக்ர ஆஸீதேகமே
வாத்விதீயம் ।

(2) ஆத்மை வேதம் ஸர்வம் ।

(3) ஏகோய மாத்மா பஹுதாபபூவ ।

12. பஞ்ச பூதங்களும், உலகமும், பிறந்ததும், பிறப்பதுமாகிய எல்லாப் பொருள்களும் அந்த ப்ரஹ்மமே யென்று சொல்லும் ஶ்ருதியின் பொருளைச் சரியாய் அறிந்துகொள்.

ஶ்ருதி ப்ரமாணம்

விஶ்வம் பூதம் புவனம், ஜாதம் ஜாய மானம் ।

13. இதக் காரணத்தினுல் ஒ மகனே! இந்த உலகத்தின் உற்பத்தியும், சிவஜீவர் உற்பத்தியும் அந்த ப்ரஹ்மத்தில் கற்பனை செய்யப்பட்ட வடிவமென்று அறிந்துகொள்.

14. இவ் விதமாய் யுக்தி, அநுமான ப்ரமாணம், ஸ்ருதி ப்ரமாணம் ஆகிய இவற்ருல் இவ் வுலகம் யாது என்னும் சந்தேகம் நீங்குமாறு இவ் வதிகாரத்திற் சொன்னேன்.

15. எட்டுச் சூத்திரங்களையும், எண்பத்தைந்து பாசுரங்களையும் பெற்று விளங்கும் இம் முதலாவது அதிகாரத்தை விருப்பத்தோடு கேட்டவனே கிருதார்த்தனுகின்ருன்.

முதலாவது அதிகாரம் முற்றிற்று

—: 0 :—

## 2 - வது அதிகாரம்.

### 1-ம் சூத்திரம்—வினு நிரூபணம்

[கணக்கற்ற நற்குணங்களுக்கு இருப்பிடமான குருஸ்ரேஷ்டரே! உலகம், ஈஸ்வரன், ஜீவன் ஆகிய இவற்றின் நிலைமை எப்படிப்பட்டதென்று சொல்லியருளல் வேண்டும்.]

1. ஸ்ரீ மஹாதேவனுகியும், பார்வதீ தேவி ஸமேதனுகியும், யதார்த்தமான ஆநந்தத்திற்கு இருப்பிடமாகியும், அடியார்கள் விரும்பிய பொருளைத் தரத்தக்க ஸ்வபாவமுள்ளவனுகியு மிருக்கும் சிவபெருமானைச் சந்தோஷத்தோடு வணங்குகின்றேன்.

2. ஸம்ஸாரமாகிய ஆரண்யத்திற் சஞ்சரிக்கும் ஜீவர்களுக்கு எப்போதும் மோக்ஷ மார்க்கத்தைக் காட்டிக்கொண்டிருக்கும் குருஸ்ரேஷ்டரே! இப்போது அடியேன் மீது கருணை கூர்ந்து அடியேனது விண்ணப்பத்தைக் கேட்டருளல் வேண்டும்.

3. ஈஸ்வரன், ஜீவன், உலகம் ஆகிய இவற்றை எவ்வாறு அறிவேன்? அந்த ஈஸ்வரனும், ஜீவனும் எவ்விடத்தில், எவ்விதம் இருக்கின்ருர்கள்? இந்த விஷயத்தை அடியேனுக்கு விவரமாகச் சொல்வீராக.

—: 0 :—

## 2-ம் சூத்திரம்—ஜகத் ஜீவேஸ்வர கற்பிதத்வ நிரூபணம்

[ப்ரஹ்மம் ஒன்றே உபாதியினுல் ஈஸ்வரன், ஜீவன் என்று சொல்லப்படு மென்று அறிதல் வேண்டும்.]

1. ஓ மகனே! நீ இந்த விஷயத்தை யறியுமாறு வேதாந்தப் பொருளை யநுஸரித்து அன்புடன் சொல்லுகின்றேன்; கேள். அந்தப் பரமாத்மாவே உபாதியினுல் ஈஸ்வரனென்று சொல்லப்படுகின்முன்.

2. மேலும், ஈஸ்வரன் ஸர்வஜ்ஞத்வம் முதலிய அத்யதிக சக்திகளுடன் கூடினவனென்று சொல்லப்பட்டு, உலகங்களை யெல்லாம் நடத்தி முக்கிய கர்த்தாவா யிருக்கின்முன்.

3. பரிபூர்ணமான அந்தப் பரப்ரஹ்மம் ஒன்றே அந்த த்ரிகுணுத்மகமான பிரகிருதியின் வேருெரு அவஸ்தையான அகங்காரத்தையே ஆதாரமாக்கிக்கொண்டு ஜீவாத்மாவென்னும் பெயரினுல் விளங்கும்.

4. அந்தப் பரமாத்மா கர்த்ருத்வம், போக்த்ருத்வம் முதலிய குணங்களுள்ள அகங்காரத்திற் கலந்து, அதன் தர்மத்தை யடைந்திருப்பதனுல் ஜீவனென்று சொல்லப்படும்.

5. ஜீவாத்மா தன் பிராரப்த முதலிய கர்மங்களின் பலனை யநுபவிப்பதன் பொருட்டு ஸகல பிருதிவி முதலிய பூதங்களும், அவற்றினுலுண்டான வஸ்துக்களும் ஆவரித்துக் கொள்வதனுல் உலகம் காணப்படுகின்றது.

6. அந்த உலகம் ஜீவர்களுக்கெல்லாம் பிராப்தமாகி, அஜ்ஞானத்தை யுண்டாக்கி, அது இது வென்னும் பேதத்தை யுண்டாக்கி, அநேக வியவகாரங்களுக்கு ஆஸ்ரயமாய்க் காணப்படும்.

7. இவ்விதமாய் ஈஸ்வரன், ஜீவன், உலகம் ஆகிய இவற்றின் ஸ்வரூபத்தை நன்ருய் அறிந்துகொள். இன்னும், அந்த ஜீவேஸ்வரர்கள் எவ்விடத்தில் எவ்வாறிருக்கின்முர்க ளென்பதையும் சொல்லுகின்றேன்; கேள்.

8. ஜீவேஸ்வரரிருவரும் தேகத்தில் ஓர் அவயவமாகிய இதய கமலத்தின் கர்ணிகையின் நுனியில் எப்போதும் சேர்ந்து பிரகாசிப்பார்கள்.

9. பேதமில்லாதவரான ஜீவேஶ்வரர்கள் எவ்வாறு பேதமுள்ளவராய் ஓரிடத்தில் காணப்படுவார்கள் என்று ஸங்கை நிகழுமாயின், இந்த விஷயத்தில் திருஷ்டாந்தத்தைச் சொல்லுகிறேன்.

10. நீர் நிறைந்த குடத்தில் அந்த நீரில் பிரதிபிம்பிக்கும் ஆகாயம், அதில் நிலேத்திருக்கும் உண்மையான ஆகாயம், இவ்விரண்டுமிருப்பது போல ஜீவேஶ்வர ரிருவரும் ஒன்றிலே சேர்ந்திருப்பார்கள்.

11. எல்லாப் பொருள்களின் அகத்திலும், புறத்திலும் முன்னரே யிருக்கும் பரமாத்மாவுக்குப் பிரதிபிம்பம் முதலியவற்றைச் சொல்லலாமோ என்று ஆக்ஷேபனே நிகழுமாயின், சொல்லுகின்றேன்; கேள்.

12. மேலிருக்கும் ஆகாயமே குளத்தில் பிரதிபிம்பிப்பது; ஏனெனின், அவ் வாகாயத்திலிருக்கும் நக்ஷத்திரம், மேகம், முதலியன்வ அக் குளத்தில் தோன்றுகின்றன.

13. எவ்வெவ்விடத்திலும் நிறைந்துள்ள ஆகாயம் குளத்தில் பிரதிபிம்பிப்பது போலப் பரிபூர்ணமான பரமாத்மா உபாதியினுல் ஜீவேஶ்வரரெனப்பட்டுச் சஞ்சரிக்கும்.

14. ஒரு இலக்கத்துக்குப் பக்கத்தில் ஒன்று, இரண்டு, மூன்று சுன்னங்கள் வருமாயின் முறையே பத்து, நூறு, ஆயிரமென்று சொல்லப்படுவது போல ப்ரஹ்மத்தில் உபாதியினுல் வெவ்வேறு வடிவமுண்டாகும்.

15. பிரகிருதியினுல் ஈஶ்வரத்வமும், அகங்காரத்தினுல் ஜீவத்வமும், ஸகல பிருதிவி முதலிய பூதங்களினுல் உலகமுமாகும். ஓ நிர்மல புத்தியுள்ள சீடனே! இவ்வாறு நீ அறிந்துகொள்.

—: o :—

## 3-ம் சூத்திரம்—ஜீவேஶ்வர விசேஷ நிரூபணம்

[ஓ குருஶ்ரேஷ்டரே! ஜீவேஶ்வரர்களின் நிலைமையையும், அவ் விதய கமலத்தின் ஸ்வரூபத்தையும் அடியேன் விளங்க உணருமாறு அடியேனுக்கு அருளல் வேண்டும்.]

1. உடன் மயிர் சிலிர்க்கவும், கண்கள் ஆநந்த பாஷ்பம் சொரியவும், விம்மிக்கொண்டு குருவை வணங்கித் துதித்து விண்ணப்பஞ் செய்தான்.

2. யதார்த்தமான ஆநந்தத்திற்கு இருப்பிடமான குருஸ்ரேஷ்டரே! முன்னர் அவ் விதய கமலத்தின் தன்மையையும், அக் கமலத்தில் ஜீவேஸ்வரரிருக்கும் தன்மையையும் தயவுசெய்து தெரிவிப்பீராக.

3. என்று கேட்க, குரு சொல்லுகிறார். ஓ மகனே! நீ இப்போது கேட்ட கேள்வி நல்லது. இதனைச் சொல்லுகின்றேன், மிகவும் ரஹஸ்யமான தென்று உன் மனத்திற்கொள்.

4. ஒவ்வொருவர் தேகத்திலும் குதம், குய்யம், கொப்பூழ், மார்பு, கண்டம், புருவ நாப்பண், நெற்றி ஆகிய இவ்விடங்களில் முறையே ஏழு சக்கரங்கள் இருக்கின்றன. இது ஸத்யம்.

5. அந்தச் சக்கரங்களில் முறையே நான்கு இதழ், ஆறு இதழ், பத்து இதழ், பன்னிரண்டு இதழ், பதினாறு இதழ், இரண்டு இதழ், ஆயிரம் இதழ்களோடு கூடிய கமலங்கள் இருக்கின்றன.

6. வெவ்வேறு வடிவு, வெவ்வேறு அதிதேவதை, வெவ்வேறு அக்ஷரம், வெவ்வேறு காந்தியுடையனவாய் அவை வெவ்வேறாக விளங்குகின்றன.

7, 8. அவ் வேழு கமலங்களில் மத்திய கமலமென்று சொல்லப்படுகின்ற இதய கமலத்தின் நடுவில் ஒரு வெள்ளைத் தாமரை கீழ் நோக்கிய முகமுடையதா யிருக்கும். அந்தக் கமலத்திற்கு டகார முதல் நகாரம் வரை எட்டு அக்ஷரங்கள் முறையே இருக்கின்றன. அந்தக் கமலம் பூர்வ (கிழக்கு) திக்காதியாய் எட்டுத் திக்கிலும், எட்டு இதழ்களைத் தரித்துப் பிரகாசித்துக் கொண்டிருக்கும்.

9. அந்தக் கமலத்தில் ஓங்காரமே கர்ணிகை (தாமரைக் கொட்டை), வித்தைகளே சேறுகள், அணிமாதி அஷ்ட ஐஸ்வர்யங்களே இதழ்கள், ஞானமே நாளம், மஹத்தத்வமே கிழங்கு.

10. அதுவே இதயம்; அதுவே பரமசாதனம்; அதுவே சிவ பவனம்; அதுவே மஹாசக்கரம்; அதுவே பூர்ண ஶிகரி; இவ்வாறு யதீதம் என்னும் உபநிஷத் வசனத்தினுற் சொல்லப்பட்டிருக்கின்றது.

### ஶ்ருதி ப்ரமாணம்

யதிதம் ஸாஷ்ட தளம் ப்ரோக்தந் ததேவ
ஹ்ருதயம் ததாத்மஸ்தானம் ।
தச்சிவகேஹம் தத் பூர்ணகிரிஸ் தன்
மஹா சக்ரம் வித்தி ॥

11. அப்பா, சீடனே! சூதகீதை, வித்யாநாத கீதை, சிவகீதை, யோகாசார ஸமுச்சயம் ஆகிய இவற்றிற் சொல்லப்பட்டிருக்கும் அபிப்பிராயமே இது வென் றறிந்துகொள்.

### சூத கீதை

ஹ்ருதயேஷ்ட தளோ பேதே ஜீவஶ்சரதி கர்மணா ।

### சிவ கீதை

நாபேரூர்த்வ மத: கண்டாத்வயாப்ய
திஷ்டதி யத்ஸதா ।
தஸ்ய மத்யேஸ்தி ஹ்ருதயம் ஸநாளம்
பத்மகோஶவத் ॥
அதோமுகஞ்ச தத்ராஸ்தி ஸூக்ஷ்மம்
ஸுஷிரமுத்தமம் ।
தகராகாஶமித்யுக்தம் தத்ர ஜீவோ
ஹி திஷ்டதி ॥
வாலாக்ர ஶதபாகஸ்ய ஶததாகல்பிதஸ்யச ॥
பாகோஜீவஸ் ஸவிஜ்ஞேயஸ் ஸசாநந்த்யாய
கல்பதே ॥
ஸ்வகர்மாநு குணேனைவ சாத்யஷ்ட தளேஷுஸ: ॥

### வித்யாநாத கீதை

ஹ்ருதயம் யன்மயா ப்ரோக்த மஷ்டபத்ரோப
ஶோபிதம் ।
ததேவ பரமம் ஸ்தானம் ததேவதஹராம்விது: ॥

## யோகர்சார ஸமுச்சயம்

*ஹ்ருதயம் பரமஸ்தானம் ஜீவாத்ம*
*பரமாத்மநோ:।*

12. யோகிகளிற் பெரியோர் முக்கியமாய் இவ் விதய கமலத்தையே தியானித்துக்கொண்டு, அவ்விடத்தில் எக்காலத்திலும் ஜீவாத்ம பரமாத்மாக்களின் சேர்க்கையாலுண்டாகும் ஆநந்தத்தை யநுபவிப்பார்கள்.

13. அந்த ஜீவன் மயிர் நுனியின் ஆயிரம் பங்கில் ஒரு பங்களவு வடிவுடையவனாய்ச் சஞ்சலமான நிலைமையைப் பற்றியிருக்கின்றான்.

14. அவ் விதய கமலத்தில் அக்கிக் கொழுந்து வடிவமுள்ள ஜீவன் ஈஸ்வரனுடன் கூடிப் பிரகாசிக்கின்றான். ஓ சீடனே! தஸ்யமத்யே என்னும் ஸ்ருதியின் பொருள் இதுவாம்.

### ஸ்ருதி ப்ரமாணம்

*தஸ்ய மத்யே வஹ்நிஸிகா அணீயோர்த்வா*
*வ்யவஸ்திதா ।*

15. ஈஸ்வரன் வியவகாரிகனான ஜீவனுடன் கூடியும், கூடாதவனாயிருப்பான். இது த்வாஸுபர்ணா என்னும் உபநிஷத் வசனத்திற் சொல்லப்பட்ட அபிப்பிராயம்.

### ஸ்ருதி ப்ரமாணம்

*த்வாஸுபர்ணா ஸயுஜா ஸகாயா*
*ஸமானே வ்ருக்ஷே பரிஷஸ்வஜாதே ॥*

16. அறிவு என்னும் ஆகாயத்தில் தேகமே கடம். அகங்காரமே நீர். ஜீவனே அதில் தோன்றும் பிரதிபிம்பம். ஈஸ்வரனே சூரியனென்று சொல்லப்படுவான்.

17. அவ் விதய கமலத்தில் ஜீவன் எக்காலத்திலும் சஞ்சரித்து, போகங்களை யெல்லாம் அநுபவித்து, ஜாக்ர முதலிய வெவ்வேறு அவஸ்தைகளை யடைகின்றான்.

—: o :—

## 4-ம் சூத்திரம்—ஜீவனது அவஸ்தாத்ரய நிரூபணம்

[ஜீவனது சஞ்சாரத்தினால் என்னென்ன உண்டாகின்றதோ, அவற்றை யெல்லாம் எனக்கு அருளிச்செய்வீரென்று சீடன் கேட்க, குரு சொல்லுகின்றனர்.]

1. பின்னர், சீடன் குருவின் பாத தாமரைகளை வணங்கி, ஓ நிர்மல மூர்த்தியே! கிருபை செய்வீராக வென்று கைகளைக் கூப்பி அன்புடன் விண்ணப்பஞ் செய்தான்.

2. ஓ குருவே! ஜீவாத்மா அவ் விதய கமலத்தில் எவ்வாறு சஞ்சரிக்கின்றான்? அதற்குக் காரணம் யாது? இவ் விஷயத்தைத் தயவுடன் எனக்குப் போதிப்பீராக.

3. இவ்வாறு கேட்க, குரு கூறுகின்றார். ஓ மகனே! ஜீவன் கர்ம வசத்தனாய் அவ் விதய கமலத்தில் மனமே தனக்கு இரதமாகக் கொண்டு அதில் ஏறிச் சஞ்சரிக்கின்றான்.

4. பூர்வே என்னும் ஶ்ருதி வசனப்படி, ஜீவன் அவ் விதய கமலத்தின் எட்டு இதழ்களிலும் சஞ்சரிக்கும்போது பூர்வ (கிழக்கு) இதழ் முதற்கொண்டு ஒவ்வொரு இதழிலும் முறையே பக்தி, பசி, கோபம், பாவபுத்தி, ஆடல், சஞ்சாரம், பெண்ஸங்கம், பொன்னுசை ஆகிய இவைகள் உண்டாகின்றன.

### ஶ்ருதி ப்ரமாணம்

பூர்வே பக்தி꞉ க்ஷுதாக்நேயே யாம்யே கோபஸ்து ।
நைருதே ॥

பாபபுத்திர் வாருணே லீலா வாயவ்யாம் கமனம் ததா ॥
உத்தரே ஸுரதம்சைவ தனகாம்க்ஷா ததாபரே ॥

5. இவ்வாறு ஜீவன் அவ் விதழ்களிற் சஞ்சரித்து, அவ் விதய கமலத்தின் நடுஸ்தானத்திற்கு இறங்கின பொழுதே வைராக்கியமும், ஞானமுமுண்டாகின்றன.

6. ஓ மகனே! இவ்வாறு சஞ்சரிக்கும் ஜீவன் என்னும் அன்னம் விஶ்வன் என்னும் பெயரை யடைந்து, ஸ்தூலதேகத்தின் உத்தியோகத்தினால் ஜாக்ராவஸ்தையை யடையும்.

7. அந்த ஜீவன் இதழ்களிற் சஞ்சரிப்பதை விட்டு, அதன் சேற்றினிடத்தில் இறங்கும் போது தைஜஸன் எனப்படுவான். அப்

போது ஜாக்ராவஸ்தையில் அநுபவிக்கப்பட்ட விஷயங்களின் வாசனையினால் ஸ்வப்னாவஸ்தையையும், லிங்கசரீரம் என்னும் ஸூக்ஷ்ம தேகத்தையும் அடைகின்றான்.

8. ஜீவன் சேற்றை விட்டு, அந்தக் கமல கர்ணிகையை யடையும்போது ஸுஷுப்த்யாவஸ்தையையும், காரண தேகத்தையும் அடைகின்றான்.

9. அவ் விதய கமலத்தில் ஜீவன் அந்த மூன்று இடங்களிலும் சஞ்சரிக்கும்போது முறையே கண், மனம், மாயை ஆகிய இவற்றின் உதவியினால் முறையே ஸ்தூல விஷயங்கள், வாசனா விஷயங்கள், கேவல சுகமென்னும் இந்த்ரஜாலம் போன்ற போக்கிய வஸ்துக்களை யநுபவிக்கின்றான்.

10. ஜாக்ரத்திற்கு ஸாத்விக குணமும், ஸ்வப்னத்திற்கு ராஜஸகுணமும், ஸுஷுப்திக்குத் தாமஸகுணமும் மூலமென்று சொல்லப்படுமென்று நீ அறிந்துகொள்.

11. தாவரங்களுக்கு ஸுஷுப்த்யாவஸ்தையும், பசு முதலிய ஜீவன்களுக்கு ஸ்வப்னாவஸ்தையும், தேவர்களுக்கு ஜாக்ராவஸ்தையும், மனிதர்களுக்கு ஜாக்ரம், ஸ்வப்னம், ஸுஷுப்தி யென்னும் மூன்று அவஸ்தைகளும் உண்டு.

12. தஸ்யத்ரயாவஸ்தா என்னும் ஶ்ருதி வசனப்படி, இவ்வாறு ஜீவனுக்கு வெவ்வேறு அவஸ்தைகள் இருக்கின்றன என்பது பெறப்படும்.

## ஶ்ருதி ப்ரமாணம்

தஸ்ய த்ரயாவஸ்தா ஆஸிதேஹ கைவல்யம் நித்யம்.

13. இவ்விதமான ஜாக்ர முதலிய அவஸ்தைகளில் ஜீவன் எக்காலத்திலும் இருப்பான். அவ் வவ்வவஸ்தைகளில் ஈஶ்வரன் முறையே விஷ்ணு, பிரமன், உருத்திரன் ஆகிய இவர்களின் வடிவங்கொண்டு ஜீவனை நடத்துவான்.

14. யோந்தரோ நியமதி என்னும் ஶ்ருதி வசனப்படி, ஈஶ்வரன் ஜீவஸமூஹத்தைக் கூடவைத்துக்கொண்டு நடத்துகிறானென்பது பெறப்படும்.

## ஶ்ருதி ப்ரமாணம்

யோந்தரோ நியமதி ஜீவப்ருந்தம்ஸ ஆத்மா.

—: o :—

## 5-ம் சூத்திரம்—ஈஶ்வரனுக்கு ஸந்நிதான கர்த்ருத்வ நிரூபணம்

[பிரேர்யத்வம் (ஏவப்படுதல்), பிரேரகத்வம் (ஏவுதல்) ஈஶ்வரனுக்கு உண்டாவது எங்ஙனம் என்று வினவிய சீடனுக்குக் குரு அன்புடன் தெரிவித்தார்.]

1. பக்த ஸமூஹத்தை இரக்ஷிப்பவரே! வாழி; நற்குணங்களென்னும் இரத்தினங்கள் கோக்கப்பட்ட வடமாயிருப்பவரே! வாழி; ஆநந்த மூர்த்தியான குருவே! வாழி; அடியேனுடைய விண்ணப்பமும் வாழி! என்று சீடன் வணங்கினான்.

2. ஜீவனும், ஈஶ்வரனும் ஒன்றே யென்று முன்னர் அறிவித்து, பின்னர் அந்த ஜீவனுக்குச் சிவபெருமானே பிரேரகனென்று சொல்வதை யறிந்துகொள்வது எப்படி? தெரிவியுங்கள்.

3. ஒரே மனிதனிடத்தில் தனக்குத் தானே சேவகனாகியும், தனக்குத் தானே அரசனாகியுமிருக்கும் பாவம் உலகத்தில் சம்பவிக்கின்றதா? ஓ குருஶ்ரேஷ்டரே! இந்த விஷயத்தை அடியேனுக்கு அநுக்கிரகித்தல் வேண்டும்.

4. இவ்வாறு சீடன் கேட்க, ஆநந்த பரிதரான குரு தன் சீடனை நோக்கி, சந்தோஷமடைந்து, மகனே! கேள் என்று திருஷ்டாந்த பூர்வகமாய்த் தெரிவித்தார்.

5. சூரியன் தன் பிரதிபிம்பத்தைத் தன்னிடத்தில் தோன்றும் காலத்தினால் நடத்துவதுபோல ஈஶ்வரன் ஜீவர்களைப் பிரேரேபிக்கின்றான்.

6. சிவபெருமான் தானே பல உலகங்களைப் படைத்து, அவைகளைத் தன்னிடத்தில் அடக்கிக்கொள்கின்றான்; எவ்வாறெனின், சிவபெருமான் தானே நிமித்த காரணனும், உபாதான காரணனுமாயிருக்கின்றான்.

7. தானே உபாதான காரணனும், நிமித்த காரணனுமாயிருந்து, உலகங்களைப் படைத்து, அழிக்கும் (ஒடுக்கும்) விஷயத்தில் திருஷ்டாந்தம் சொல்லுகிறேன், கேள்.

8. சிலந்திப்பூச்சி தன்னிடத்தி லிருக்கும் நூலினால் சக்கரம் போன்ற வட்டமான வடிவத்தைச் செய்து, அதனை யழித்து, மறுபடியும் முன்னிருந்தபடி (தன்னில் ஒடுக்கம்) செய்கின்றது.

9. இன்னும், ஒரு மனிதன் நகம், மயிர் முதலியவற்றிற்கு இயல்பாக உபாதான காரணனும், நிமித்த காரணனுமாகின்றானென்று சொல்லப்படுவது போலவும்.

10. ஜீவன் தன் ஒன்பது குணங்களுக்கு நிமித்த காரணனும், உபாதான காரணனுமாயிருப்பது போலவும் ஈஸ்வரன் உலகத்துக்குப் பின்னனாயிருந்து இவ் வுலகத்தைப் படைக்கின்றான்.

11. இவ்விதமாய்ச் சிருட்டிக்கின்றானென்றால், விகாரத் தன்மையைப் பெற்றவனாவனே என்னும் ஸங்கை நிகழுமாயின், திருஷ்டாந்த வாயிலாய்ப் பதில் கூறுகின்றேன் ; கேள்.

12. சூரியன் ஆகாயத்திலிருப்பவன் ; சூரியகாந்தக்கல் பூமியிலிருப்பது ; இவை யிரண்டிலிருந்து எரியும் நெருப்பு உண்டாகும் விதத்தை விசாரித்தல் வேண்டும்.

13—14. சூரியகாந்தக் கல்லுக்குத் தன்னிடத்தில் நெருப்பு உண்டாகவேண்டு மென்னும் விருப்பம் இல்லை. சூரியனுக்கு அந்தக் கல்லில் நெருப்பை யுண்டாக்கவேண்டு மென்னும் பிரயத்தனமும் இல்லை. ஆயினும், இவை இரண்டன் சேர்க்கையினால் நெருப்பு திட்டமாயுண்டாவது போல, பரமாத்மா வென்னும் சூரியன் ஸந்நிதியில் பிரகிருதி யென்னும் சூரியகாந்தத்தில் ஸகலமான தத்துவங்களென்னும் நெருப்பு உண்டாகின்றது. இவ்வாறிருப்பதனால், ஈஸ்வரன் விகார மில்லாதவனா யிருக்கின்றான்.

15. ஓ குருவே ! சூரியன் வேறு, கல் வேறாயிருப்பதனால் அவ் விடம் நெருப்பு உண்டாகின்றது. அவ் வொப்புமை ஒருவனேயாயிருக்கும் பரமாத்மாவினிடத்தில் எவ்வாறு பொருந்து மென்று ஸங்கை நிகழுமாயின், சொல்லுகிறேன் ; கேள்.

16—17. தானே மழையைப் பூமிக்குச் சொரிந்து, அந்த நீரினிடத்திற் புகுந்து, பிரதிபிம்பரூபத்தினாற் சஞ்சரிக்கும் சூரியனுக்கு அந்தப் பிரயத்தன மில்லாதது போல, ஈஸ்வரன் தன்னிடத்தில் அகலாது எக்காலத்திலும் இருக்கும் சக்தியினால் உலகத்தை யெல்லாம் சிருட்டித்து, அதில் சேர்ந்திருப்பினும், விசாரிக்குமிடத்து, விகார மில்லாதவனா யிருப்பானென்று அறிந்துகொள்.

18. ஈஸ்வரன் தானே சிருஷ்டித்த உலகத்தில் தானே வியா பித்திருக்கின்றான். ஓ மகனே! இதனை நீ நம்புவாயாக. இவ் விஷயத்தில் தத்தேவாநுப்ரவிஸதி என்னும் ஸ்ருதி வசனமிருக்கின்றது.

ஸ்ருதி ப்ரமாணம்

தத்ஸ்ருஷ்ட்வா ததேவாநுப்ரவிஸதி ।

—: 0 :—

## 6-ம் சூத்திரம்—ஈஸ்வரனது அவிகாரித்வ நிரூபணம்

[பரமாத்மா விகாரமில்லாதவனுயில்லாதிருந்தால், ஜனன மரண பரம்பரைக்கு முடிவே உண்டாகாது. நீ இதனைக் கவனிப்பாயாக.]

1. அவ்வாறன்றி, ஈஸ்வரன் இச்சையுள்ளவனென்று கூறுவதாயின், எக்காலத்திலும் தோன்றும் உலகத்தைச் சிந்தித்துக் கொண்டேயிருப்பானென்று சொல்லவேண்டும்.

2. இவ்விதமாய் உடன்படின், எக்காலத்திலும் விருத்தி நாசமாகாதிருப்பதனுல் எப்போதும் ஸம்ஸாரமென்னும் பாசக் கட்டு தோன்றிக்கொண்டேயிருத்தல் வேண்டும்.

3. ஸம்ஸாரம் கெடாத விடத்தில் மோக்ஷத்தை விதிக்கும் சாத்திரங்கள் முதலானவை பயனற்றதாக வேண்டும். ஆதலால் ஈஸ்வரனது ஸந்நிதானமே ஸம்ஸாரத்துக்குக் கர்த்ருத்வமா யிருக்கின்றது (ஸந்நிதானத்தில் ஸம்ஸாரம் உண்டாகிறது).

4. இன்னும் அப் பரமாத்மாவைச் சாதாரணமான நிமித்த காரணனென்று கூறுவதாயின், அவன் குயவனைப் போல நாசம், விகாரம் ஆகிய இவைகளுள்ளவனென்று கூறினபடி யாயிற்று.

5. ஆகையால், இந்த உலகம் அநிர்வாச்சிய லக்ஷணமுள்ள மாயையினுல் ஈஸ்வரன் ஸந்நிதியில் அநேக விதமாய் உதிக்கும்.

6. ஸந்நிதானமே ஈஸ்வரனுக்குக் கர்த்ருத்வமென்று கூறுவதாயின், இவ் வுலகம் ஒரே விதமாதல் வேண்டும். அநேக விதமான காரியம் தன்னுற்றானே ஆகாதென்னும் ஸங்கை நிகழுமாயின், சொல்லுகிறேன்; கேள்.

7—8. நிர்விகாரனை சூரியனது ஸந்நிதானத்தில் தாமரை மலர்கின்றது, ஆம்பல் குவிகின்றது, மண் இறுகுகின்றது, மெழுகு உருகுகின்றது. அவ்வாறே மாயை அநேக விதமான விருத்திகளை

யடைந்து ஈஸ்வரனது ஸந்நிதியிற் சஞ்சரிப்பதனால் அநேக காரியங்கள் உண்டாகின்றன. அதுவே ஈஸ்வரனுக்குக் கர்த்ருத்வமாயிருக்கும்.

9. இவ்விதம் ஈஸ்வரன் நிர்விகாரனாய்த் தானே ஜீவனையும், உலகத்தையும் தோற்றுவித்து சேஷ்டிப்பிக்கின்றான். இவ் விஷயத்தில் கர்த்தைவ முதலிய பிரமாணங்கள் இருக்கின்றன.

ஸ்ருதி ப்ரமாணம்

கர்த்தைவ வேஷதாரீவ ஜீவப்ரபஞ்சம்
ப்ரதர்ஸ்ய சேஷ்டேத் ।

—:o:—

## 7-ம் சூத்திரம்—ஜீவனது அவிகாரித்வ நிரூபணம்.

[ஜீவனுக்கிருக்கும் ஸகல ஸம்ஸாரமென்பது, விசாரிக்குமிடத்து, உண்மையல்ல.]

1. ஸம்ஸாரமென்னும் பெரும்பிணிக்கு வைத்தியரும், யோகிகளினால் வணங்கப்பட்டவரும், நிஜமான ஆநந்தத்தைக் கொடுப்பவரும், ஷட்குண ஐஸ்வர்ய ஸம்பன்னருமான குருவே! தயையுடன் அடியேனுடைய விண்ணப்பத்தைக் கேட்பீராக.

2. ஸ்வாமி! ஈஸ்வரன், ஜீவன் ஆகிய இருவரும் சூரியன், சூரிய ப்ரதிபிம்பம் ஆகிய இவ்விரண்டினையும் போல இருக்கின்றார்களென்று முன்னர் தெரிவித்து, உடனே ஈஸ்வரனுக்கு நிர்விகாரத்வத்தை அருளிச் செய்தீர்கள்.

3. பிம்பமே பிரதிபிம்பமென்பது போல ஈஸ்வரனுக்கும் ஜீவனுக்கும் ஐக்ய முண்டாய் ஜீவாத்மாவைப் போல ஈஸ்வரனும் (ஸம்ஸார பந்தத்துக்கு) உள்ளாவாரென்று கூறவேண்டுமன்றோ?

4. தேவரீர் இந்த வார்த்தையைக் கேட்டு, ஆலோசித்து, அடியேனுக்கு உண்டாயிருக்கும் சந்தேகத்தை நிவர்த்தி செய்தல் வேண்டுமென்று வினவிய சீடனைப் புகழ்ந்து, குருஸ்வாமி இவ்வாறு விடையளிக்கலாயினார்.

5. உண்மையான முகம் சுடுகின்ற கண்ணாடியில் பிரதிபிம்பித்திருக்கும்போது தாபத்தை யடையாதது போல, அகங்காரத்தைப் பற்றிய ஜீவனது விகாரம் ஈஸ்வரனுக்குச் சம்பவிப்பதில்லை. இது உண்மை.

6. அநேக பக்கங்களையுடைய கண்ணாடியிற் பிரதிபிம்பித்திருக்கும் சுந்தரமான முகத்திற்கு அவ் வநேகத்வம் காணாதது போல, அகங்காரத்தினால் தோன்றிய ஜீவனுக்கு ப்ராப்தமான விகாரம் ஈஶ்வரனுக்கு உண்டாகிறதில்லை.

7. ஆனால், அந்த ஜீவனுக்கு அநாதியான அஜ்ஞான விஶேஷத்தினால் உண்டான விகாரத்தை யுண்மையானதென்று கூறுவாயாயின், அதனை யறியும்படி சொல்லுகிறேன்.

8. மேகம் ஓடிக்கொண்டிருக்கும்போது, சந்திரன் ஓடுவதைப் போலத் தோன்றுவ தன்றி, எவ்வாறு ஓடுவதில்லையோ, அவ்வாறே ஜீவனுக்கு (அகங்காரத்தினாலுண்டாகும் துக்காதி) விகாரம் ஸ்வபாவமானதன்று.

9. வீட்டின் சாளரத்தில் வந்த சூரியகிரணத்தில் கையசைத்தால் அச் சூரியகிரணம் அசைவது (அசைவதாகத் தோன்றுவது) போல ஜீவன் மனத்துடன் கூடிச் சஞ்சரிக்கின்றான்.

10. கப்பல் ஏறியிருப்பவனுக்குக் கரையிலுள்ள மலைகள் அசைவதாகத் தோன்றுவது போல ஜடபுத்திக்கு ஜீவன் விகாரத்தையடைந்தவன் போலக் காணப்படுகின்றான்.

11. ஜீவனுக்கு விகாரமென்பது கற்பிதம்; உண்மையல்ல. ஓ சிடனே! சூரியன் ஜலப்ரவாஹத்தில் செல்வதுபோலக் காணப்படுமாயினும், சூரியன் எவ்வாறு செல்வதில்லையோ, அவ்வாறே மனத்திற்கு உண்டான விகாரம் ஜீவனிடத்தில் தோன்றுவதே யன்றி, ஜீவனுக்கு ஸ்வபாவமல்ல.

12. வேதம் இந்த அபிப்பிராயத்தை அயமாத்மா என்பது முதலிய வசனத்தினாற் சிறப்பித்துக் கூறுகின்றது. ஆகையால், சிடனே! ஜீவனை நிர்விகாரனென்று அறிந்துகொள்.

ஶ்ருதிப்ரமாணம்

அயமாத்மா ப்ரஹ்மம் ।

—:o:—

## 8-ம் சூத்திரம்—ஜ்ஞானாந்தர நிதர்ஶன நிரூபணம்

[ஜீவன், ஈஶ்வரன், ஜகத் ஆகிய இவைகளின் தன்மையைக் குறித்து ஆலோசிப்பவர்களுக்குள் பேதமுண்டு. நீ அறிந்து கொள்.]

1. ஓ மகனே! நீ அறிந்து கொள்ளுமாறு வேதத்தில் நிச்சயிக்கப்பட்ட ஜீவேஶ்வரர்களையும், அவர்களாலாகிய உலக நிலைமையையும் சந்தோஷத்துடன் கூறினேன்.

2. (முமுக்ஷுக்கள்) அந்த உலகம், அந்த ஈஶ்வரன், அந்த ஜீவாத்மா ஆகிய மூவரையும் குரு சிஷ்ருஷையினால் அறிந்து மோக்ஷமடைந்தவராகின்றார்கள். அவர்கள் முத்திறப்பட்டவராயிருக்கின்றார்கள். மகனே! கேள்.

3. உலகமெல்லாம் வேறு, ஜீவாத்மா வேறு, ஜகதீஶன் ஒருவன் அவைகளுக்கு வேறாயிருக்கின்றானென்று அறிபவனே அதமன்.

4. தன் அநாதியான அவித்தையினாற் றோன்றிய இவ் வுலகத்தை ஈஶ்வரனாலுண்டானதென்று அறிபவனே மத்திமன்.

5. உலகமும் தானே, ஈஶ்வரனும் தானே, ஜீவாத்மாக்களெல்லாரும் தானே, இது ஸத்யமென்று அறிபவனே உத்தமன்.

6. இவ்விதமாய் ஈஶ்வரன், ஜீவன், உலகம் ஆகிய இவைகளையறியுமாறு எல்லா உபநிஷத்துக்களின் பொருளையெடுத்துக் காட்டினேன். இதனை யறிபவன் தானே பரப்ரஹ்மமாவான்.

7. விசாரிக்குமிடத்து, எட்டுச் சூத்திரங்களையும், தொண்ணூற்றைந்து பாசுரங்களையும் உடையதாய் ஞானிகள் ஒப்புக்கொள்ளுமாறு இவ் விரண்டாவது அதிகாரம் இயற்றப்பட்டது.

### இரண்டாவது அதிகாரம் முற்றிற்று

—: 0 :—

# 3 - வது அதிகாரம்

## 1-ம் சூத்திரம்—வினு நிரூபணம்

[ஆத்மா ஒன்றே யென்று கூறுவது பொருந்தாது. ஆத்மா அநேக மென்று கூறுதல் வேண்டும்.]

1. த்வைத மதத்திற்குத் தூரமானவனும், வேதாந்தத்தின் ஸாரமானவனும், அநாதியான அஜ்ஞானவிருளைக் கெடுக்கும் சூரியனுமாயிருக்கும் சிவபெருமானை அன்புடன் வணங்குகின்றேன்.

2. தன்னை விட்டு நீங்காதிருக்கும் பெண், இரண்டு புயங்கள், சந்திரகலை, அதிகமான கண் ஆகிய இவற்றை மறைத்து இங்கு எழுந்தருளிய ஆசாரியரே! வாழி யென்று துதித்து, வணங்கிச் சீடன் வினவலாயினன்.

3. குருவே! கேளுங்கள். தன்னினும் வேறு பொருள் இல்லை யென்று அறிந்தவன் உத்தமனென்று தாங்கள் கூறின், அதனை அடியேன் எப்படி அறிந்துகொள்வேன்?

4. ஆத்மாக்கள் எதிரில் பலவாகக் காணப்படும்போது யுக்தியினுல் ஆத்மா ஒருவனே யென்று கூறுவது பொருந்தாது. ஏனெனின், ஒவ்வொரு ஆத்மாவுக்கும் பேதமென்பது பிரசித்தமாய்க் காணப்படுகின்றது.

5. தேகம் வேறு, மனம் வேறு, கர்மம் வேறு, புத்தி வேறு, அடைந்திருக்கும் நிலை வேறு, அநுபவிக்கும் விஷயங்கள் வேறு. இவ்வாறிருக்க, ஆத்மா வெவ்வேறென்று கூறவேண்டு மன்றி ஆத்மா ஒன்றே யென்று கூறலாமோ?

6. ஒருவனுக்கு இன்னும் அநுபவித்தல்வேண்டு மென்னும் ஆசையும், மற்றொருவனுக்குப் போது மென்னும் ஆசையும், மற்றொருவனுக்கு நன்மை யடைதல் வேண்டு மென்னும் ஆசையும், வேறொருவனுக்குக் கொழுத்து அகங்காரப்படவேண்டு மென்னும் ஆசையும் இருக்கின்றன.

7. ஒருவனுக்கு ஜனனமும், வேறொருவனுக்கு மரணமும், மற்றொருவனுக்கு ஸம்ஸார பந்தமும், வேறொருவனுக்கு மோக்ஷமு முண்டாகும் விதத்தை நோக்குமிடத்து, ஆத்மா அநேகமா யிருத்தல் வேண்டும்; இதனை யோசியுங்கள்.

8. இங்ஙனமன்றயின், ஒருவன் தன் மனைவியிடத்திற் கூடிச் சுகம் அநுபவிக்கும்போது அந்தச் சுகம் கிருஷ்ணன் ஒருவனுக்கு உண்டான ஆநந்தம் கோபிகா ஸ்த்ரீக ளெல்லாருக்கும் உண்டாவது போல எல்லாருக்கும் உண்டாதல் வேண்டும்.

9. ஒருவன் ஓரிடத்திலிருந்தால் எல்லாரும் அவ்விடத்தி லிருத்தல் வேண்டும். ஒருவன் இறந்தால் எல்லாரும் இறத்தல் வேண்டும். ஓ குருச்ரேஷ்டரே! அடியேனது இந்தச் சந்தேகத்தை நீக்கி யருளுவீராக.

—: o :—

## 2-ம் சூத்திரம்—ஆத்மாவினது நாநாத்ம நிராகரண நிரூபணம்

[ஆத்மா பலவென்பதை ஸ்தாபித்தல் வேண்டுமாயின், அது யுக்தியினல் பாதிக்கப்படுவதனல் பலிக்காது.]

1. நீ வினவிய வினு சரியானதே. உன் மனம் ஒப்புமாறு தெரியப்படுத்துகின்றேன்; கேள் என்று மஹாத்மாவான குரு சீடனுக்குக் கூறினர்.

2. ஆத்மா அநேக மென்று கூறுபவனுக்கு விடை அளிக்கின்றேன். எவ்வாறெனின், ஆத்மாக்களை யெல்லாம் நித்தியமென்று கூறுதல் வேண்டும்.

3. ஆத்மாக்களெல்லாம் பூரணமென்று கூறின், ஒவ்வொரு தேகத்திலும் எல்லா ஆத்மாக்களும் இருப்பனவாகி, ஒரு தேகம் எல்லா ஆத்மாக்களுக்கும் சுகதுக்காநுபவத்திற்குச் சாதனமாயிருக்கிறதென்று கூறுதல் வேண்டும்.

4. அதனை யொப்புக்கொள்ளின், எல்லா ஆத்மாக்களும் ஒருங்கே ஒரு தேகத்திலிருக்குங் காரணத்தினல் அந்தத் தேகத்தில் எந்த ஆத்மா போகாநுபவத்தை யடைகின்றதென்பது அறிய முடியாததாம்.

5. ஒருவன் தன் புண்ணிய நிமித்தத்தினலுண்டான இந்தத் தேகம் தனதே யென்று கூறின், அந்தப் புண்ணியம் எல்லா ஆத்மாக்களிடத்திலும் உண்டு.

6. முந்திய தேகத்தில் தான் செய்த புண்ணியம் தனதே யென்று கூறின், அந்தத் தேகாபிமானமும் எல்லா ஆத்மாக்களிடத்திலும் உண்டு.

7. இவ்விதமான ஸாங்கர்ய (கலப்பு) தோஷத்தை நிவாரணஞ் செய்வதன் பொருட்டுப் பரமாத்மாவினால் ஒரு நியதியுண்டாகின்றது. அஃது அவரவரின் கர்மாநுஸாரமாய்ப் பலனைக் கொடுக்கின்றதென்று அறிந்துகொள்.

8. ஒரு வீட்டில் அநேகர் இருக்கையில் ஒரு விளக்கு ஆண்டு உள்ள பொருள்களை யெல்லாம் விளக்குவது போல, தேகத்தில் போகாநுபவத்தைக் கொடுக்கும் ஒரு புத்தி உண்டு.

9. அந்தப் புத்தி சத்தாதி விஷயங்களை யறிவிப்பதென்னும் லக்ஷணமுடையதாதலின், தன்னிடத்தில் இருக்கும் அநேகாத்மாக்களுக்குப் போகாநுபவத்தைக் கொடுக்கின்றது. இது ஸத்யம்.

10. எதற்கு எது ஸ்வபாவமோ, அது நாசமடைவதில்லை. எவ்வாறெனின், ஆகாயம் எக்காலத்திலும் கடமாவதில்லை. ஆகையால் புத்தி ஜீவாத்மாக்களுக்குச் சத்தாதி விஷயங்களை யறிவிக்கும் ஸ்வபாவ முள்ளதா யிருக்கின்றது.

11. ஓ மகனே! ஆத்மா ஒன்றே யென்று கூறின், அநேக விதமான போகங்களின் அநுபவம் பொருந்துவதில்லை யென்று ஆலோசித்து, அநேகாத்மாக்களென்று கூறுவதாயின், முற்கூறிய கெடுதல்கள் உண்டாகின்றன.

—: o :—

## 3-ம் சூத்திரம்—போகஸ்திதி நிரூபணம்

[ஆத்மா ஒன்றென்பதே ஸத்யம். காணப்படுகின்ற இந்த அநேகாத்மாக்களெல்லாம் கற்பனையாம்.]

1. இவ்வாறு ஏகாத்ம பட்சம், அநேகாத்ம பட்சமென்னும் இரண்டு பட்சங்களிலும் ஆக்ஷேபங்கள் காணப்படுகின்றன வென்று கூறின், ஒரு ஆத்மாவுக்கு அநேக போகங்கள் உண்டாதற்கு அநேக புத்திகளே காரணமென்று கூறுவது எளிதாயுள்ளது.

2. ஒரு ஆத்மாவே அநேக விதமான புத்திகளினால் அநேகத்வத்தை யடைந்திருப்பதனால் அத்வைதத்தில் அநேக விருத்திகள் உண்டாகின்றன.

3. கலங்கல் நீர், ஓடும் நீர், தெளிந்த நீர், சுழி நீர் ஆகிய இவற்றில் சூரியன் வெவ்வேறு விதமாய்க் காணப்படினும், சூரியன் ஒன்றே யன்றி அநேகமுண்டோ?

4. வெயிலில் அநேக விதமான இரத்தினங்களைப் பரப்பினால் அவ் வெயில் அநேக விதமான நிறமுள்ளதாய்த் தோன்றுவது போல, ஒரு ஆத்மாவே புத்தியாகிய உபாதியினால் அநேக விதமாய்த் தோன்றும்.

5. சத்தத்தைத் தனக்கு அஸாதாரண குணமாகப்பெற்ற ஆகாயம் அநேக விதமான வாத்தியங்களினால் அவச்சின்னமாகி (வரைந்து கொள்ளப்பட்டு) அநேக விதமான தொனியுடையதானதுபோல ஒரு ஆத்மாவே அநேக விதமான புத்தியின் உபாதியினால் அநேக விதமாய்த்தோன்றுகின்றது.

6. ஒரே ஸ்வரம் பாடுபவனுடைய வெவ்வேறு காணத்தை (ஸ்வரஸ்தானத்தை) யடைவதனால் பலவிதமான ஸங்கீதமாகச் சொல்லப்பட்டு, இனிது அநுபவிக்கப்படுவதுபோல, ஆத்மாவுக்கு உபாதி வசத்தினால் தேக முதலிய பேதம் உண்டாகின்றது. இதனை யறிந்து கொள்.

7. வாழையிலையில் யானை முதலியவற்றைச் சித்தரித்துப் பார்க்கும் போது ஒரு ஆகாயமே அநேக உருவமாய்க் காணப்படுவது போல, ப்ரஹ்மம் மாயையினால் அநேக விதமாய்த் தோன்றுகின்றது.

8. இராமாயண கதையை யாரம்பித்து ஆடும்போது அதைப் பார்ப்பதற்கு அநுகூலமா யேற்றிய விளக்கு ஒன்றேயா யிருப்பது போல, எல்லாவற்றிலு மிருந்து விளக்குகின்ற ஆத்மா ஒன்றே.

9. கும்ப முதலியவற்றை விளக்கும் தீபம் கும்பதீபம் முதலிய பெயர்களை யடைவதுபோல, ஞானமொன்றே பிரமை, ஸந்தேஹம், ஸ்மிருதி முதலிய பேதங்களை யடைகின்றதென்று அறிந்துகொள்.

10. நீர் உப்பு முதலிய வற்றுடன் கூடி அநேக உருசியுள்ளதாவது போல, ஒரே ஆத்மா அநேகமாகக் காணப்படும். இது தத்துவங்களினால் உண்டான பேதமாம்.

11. ஒரு கடத்திலுள்ள ஆகாயத்தில் புகை முதலியவை சேர்ந்திருக்க, மற்றொரு கடத்திலுள்ள ஆகாயத்தில் அவை யில்லாதது போல ஜீவர்களுக்குப் போகம் வெவ்வேறாயிருக்கின்றது.

12. தேகத்திற்கு ஒரு ஆத்மாவே யெனினும், இந்திரியங்களின் அநுபவம் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாது வெவ்வேறாயிருப்பதனால் போகங்கள் அநேக விதமாம்.

13. ஒரு கடலின் அலைகள் ஒன்றை யொன்று தாக்குவது போல, த்வேஷ முதலிய குணங்களினால் ஜீவர்கள் வெவ்வேறாய்க் காணப்படினும் ஆத்மா ஒன்றே.

14. மகனே! ஒரே ஆத்மாவிடத்தில் அநேக விதமான போகம் இருக்கக்கூடுமானால் அநேகாத்மாக்களென்று கூறுவதனால் கற்பனா கௌரவமென்னும் தோஷமுண்டாகு மென்று அறிந்துகொள்.

15. ஆத்மாவின் அநேகத்வம் ஸத்யமல்ல. உபாதிகளின் ஸமூஹத்தை விட்டுப் பார்த்தால் அவ் வாத்மா ஆகாயத்தைப் போல அகண்டமாய்க் காணப்படும்.

16. இந்த ஆத்மாவின் பேதம் தேக முதலிய ஜடவஸ்துக்களின் விகாரத்தினால் உண்டாவதனால் மாயாரஹிதமான ஆத்மா ஒன்றே யென்று அறிந்துகொள்.

—: o :—

## 4-ம் ஸூத்திரம்—பேதநிராகரண நிரூபணம்

[கடம், படம் முதலியவைகளில் பேதம் உண்டென்று கூறுவ்து குற்றமாயிருப்பதனால் உண்மையான தல்ல.]

1. மகனே! கேள். ஆத்மாவில் தோன்றும் பேதம் உண்மை யானதல்ல வென்று கூறுவது பெரிதன்று. கடம், படம் முதலிய வற்றிலிருக்கும் பேதமும் மித்தை யானது.

2. பேதமென்பது கடம் படம் முதலிய பேதவஸ்துக்களில் அபேத ரூபமாயிருப்பதோ? அல்லது அவற்றின் தர்மமாயிருப் பதோ? உறுதியாகச் சொல்.

3. பேதம் கட படங்களின் ஸ்வரூபமல்ல; அவற்றிலிருக்கும் தர்மமே யாம்; என்றால், தர்மி தர்மங்களில் உனது கொள்கை என்ன?

4. தர்மியினும் தர்மமென்பது பேதமோ, அபேதமோ என்று ஆராயுமிடத்து, தர்மம் தர்மியினும் பேதமென்றால் அதனைக் கேள்.

5. தனக்குத் தானே பேதமென்று கூறின், ஆத்மாச்ரய தோஷம் உண்டாவதனால் அதன் மேல் ஓர் இரண்டாவது தர் மத்தை நீ ஒப்புக்கொள்ளுதல் வேண்டும்.

6. வேறு தர்மத்தை யொப்புக்கொள்ளின், அந்யோந்யாச்ரய தோஷம் உண்டாவதனால் அதனை விட்டு ஒரு மூன்றாவது தர்மத்தை

ஒப்புக்கொண்டு பேதத்தைக் கூறின், சக்ரிகா தோஷத்தின் பயம் உண்டாகும்.

7. இதன்மேலும், ஏதாவது தர்மம் நிகழுமெனக் கூறின், அது அநவஸ்தா தோஷமாகும். இந்த நான்கு விதமான தோஷங்களிருப்பதனுல், மகனே! (தருமியினும் தர்மம்) பேதமென்பது சரியல்ல.

8. பேதமென்பது கட படாதி ஸ்வரூபமே யென்று கூறின் பேதம் தோன்றும் கட படாதிகளில் பிரதியோகி யானவற்றை அபேக்ஷியா திருத்தல் வேண்டும்.

9. தன் ரூபமே பேதமென்றால் தனக்குக் கேடு உண்டாவதனுல் ஸ்வபேதித (ஆத்மஹானி) தோஷம் வரும்.

10. ஆகையால், பேதமென்பது இவ்விதங்களான கட படாதிகளிடத்திலும் மித்தை யென்று சொல்லும்போது, மகனே! பரமாத்மாவிடத்தில் பேதத்திற்கு அவகாசமே யில்லே. இது உண்மை.

11. மேலும், தன்னினும் வேருன ஒன்றைச் சுமந்தால் அது வாதைப்படுத்தா திருப்பதில்லே; பேதமாயிருப்பதனுல்; தலேச் சுமையான கட்டுச்சோறு போல. இவ்வாறு கூறுவதே அநுமான ப்ரமாணம்.

12. வேதங்கள் த்விதீயாத்வை பயம் பவதி முதலிய வாக்யங்களில் முறையிடுகின்றன. அதனுல் (ஆத்மாவிடத்தில்) பேதமென்பது பயங்கரமாயிருக்கும்.

ஶ்ருதி ப்ரமாணம்

த்விதீயாத்வை பயம் பவதி ||

13. வேதத்தில் நேஹ நானுஸ்தி என்று சொல்லப்பட்டிருத்தலினுல் தேக முதலிய பேதத்தை யாராயுமிடத்து, அது மாயையினுல் (அஜ்ஞானத்தினுல்) கற்பிக்கப்பட்டதாம்.

ஶ்ருதி ப்ரமாணம்

நேஹ நானுஸ்தி கிஞ்சன ।

14. மேன்மையான ஶ்ருதி ம்ருத்யோஸ் ஸம்ருத்யு என்று பேதவாதியைத் தூஷிப்பதனுல் பேதமென்பது உண்மையானதல்லவென்று, மகனே! அறிந்துகொள்.

ஶ்ருதி ப்ரமாணம்

ம்ருத்யோஸ் ஸம்ருத்யுமாப்னோதியோ பேதம்
வேத்தி...

15. இவ்வாறு, இவ்வதிகாரத்தில், ஶ்ருதி, அநுமான ப்ரமாணம் ஆகிய இவைகளுடன் வேறு யுக்திகளையும் காட்டிப் பேதமென்பது ஜடப்ராந்திமூலமென்று தெரிவித்தேன்.

16. இம் மூன்றாவது அதிகாரம் ஐம்பத்திரண்டு பாசுரங்களினாலும், நான்கு சூத்திரங்களினாலும் கூறப்பட்டது.

மூன்றாவது அதிகாரம் முற்றிற்று.

—: 0 :—

## 4-வது அதிகாரம்

### 1-ம் சூத்திரம்—வினா நிரூபணம்

[தேக முதலிய வஸ்துக்களை யெல்லாம் ப்ரஹ்மமென்று ஒத்துக் கொள்ளலாமோ?]

1. தேவ கணத்தினால் வணங்கப்பட்டவனும், வேதங்களினாற் றுதிக்கப்பட்டவனும், மஹா தானதர்மங்களினால் மகிழ்பவனும், பார்வதீபதியுமாயிருக்கும் சிவபெருமானை வணங்குகின்றேன்.

2. ஜீவாத்மாக்களில் சிலரை த்ருஷ்டியினாலும், சிலரை ஸம்பாஷணையினாலும், சிலரை ஸ்பர்ஶத்தினாலும் தேவராகச் செய்ய வல்ல குருவே! இரக்ஷிப்பீராக.

3. ஸ்வாமி! அடியேன் விண்ணப்பத்தைத் திருவுளங் கொண்டருளும். முன்னர்ப் பலவிதமான யுக்திகளினாலும், உலகத்தை ப்ரஹ்மமென்று தாங்கள் உணர்த்தியது அநுபவத்தினால் நோக்குமிடத்து, உண்மையாகவே யிருக்கின்றது.

4. ஆனால், இந்தத் தேக முதலியவைகளெல்லாம் பரப்ரஹ்மமென்று சொல்லுதல்வேண்டும். அதனை யொத்துக்கொள்வது உலகாயத முதலிய மதமாகுமன்றோ?

5. தேகாதிகள் ப்ரஹ்மமல்ல வென்னின், முற்கூறிய அபிப்பிராயங்களை யெல்லாம் விட்டுவிடவேண்டும். ஓ குருவே! அடியே

னுக்கு இந்தச் சந்தேகத்தை நீக்கவேண்டுமென்று கூறிச். சீடன் வணங்கினன்.

—:0:—

## 2-ம் சூத்திரம்—ஜகத்தின் அநித்யத்வ நிரூபணம்

[அந்தப் பரப்ரஹ்மத்தினிடத்தில் காணப்படும் நாமரூபங்களெல்லாமும் மித்தை யென்று அறிந்துகொள்.]

1. ஓ சீடனே! கேள். உலகம் ஆத்மாவே யென்பதற்கு நாமரூபங்களின் தோற்றம் பொய் யென்பதே முக்யமான பொருளென்று கூறுதல்வேண்டும்.

2. சர்ப்ப முதலிய பாவத்தினுல் (சர்ப்ப முதலியவாக) காணப்படுவது இந்தக் கயிறே யெனினும், சர்ப்ப முதலிய பாவத்தில் அந்தக் கயிற்றின் தன்மை உண்டோ? உலகமும் இவ்வாறே.

3. பரமாத்மாவே உலகமாக இருக்கும்போது, உலகத்தைப் பரமாத்மா வென்பது எவ்வாறு உண்மையாகும்? இவ்வாறே (கட்டையிற் றோன்றும்) கள்ளன் மரக்கட்டை யாவதில்லை.

4. சீடனே! ஶ்ருதி விகாரோ நாமநுபம் என்னும் வசனப்படி, நாமரூபங்களை மித்தை யென்று கூறுவதனுல் நீ இவ்விதமாய் அறிந்துகொள்.

### ஶ்ருதி ப்ரமாணம்

விகாரோ நாமரூபம் ஜகத் விசாரக்ஷேலத்ருஸ்யதே।
சித்வ்ய திரேகேண விசாரே ஸர்வம் சிதேவஹி॥

5. ஓ மகனே! இந்த உலகம் மித்தையாம்; அறிவுக்கு வேருய்க் காணப்படுதலினுல், ஸ்வப்னத்தினுல் தோன்றும் கிரிசிய வஸ்துக்களைப் போல.

6. பொய்யாகாது இருப்பது எதுவோ, அது அறிவினும் வேருன் தன்று; ஆத்மாவைப் போல. இவ்வாறு கூறுவது அநுமான ப்ரமாணம். சீடனே! இது உண்மை யென்று அறிந்துகொள்.

7. இவ்வாறு கூறுவதாயின், எல்லாவற்றையும் மித்தை யென்று கூறுதல்வேண்டும். அவ்வாருயின்; தான் உண்மையான

மோக்ஷத்தை யடைதற்குப் பொய்யான தேகம் ஸாதனமாவதின்றே என்றால், சொல்லுகிறேன் ; கேள்.

8. சிலாரூபமான, வயிரவக்கடவுளிடத்தில் அநேக உண்மையான சித்திகள் காணப்படுவது போலப் பொய்யான ஸாதனத்தினால் உண்மையான மோக்ஷம் உண்டாகும்.

9. ஸ்வப்னம் பொய்யாயினும் அந்த ஸ்வப்னத்தில் பெண் ஸங்கத்தினால் உண்டாகும் வீரிய வீழ்ச்சி உண்மையாவது போல, ஓ மகனே ! பொய்யினிடத்திலும் உண்மை உண்டு.

10. கண்ணாடியிற் றோன்றும் பிரதிபிம்பம் முகத்தின் அழகினைத்தையும் வெளியிடுவது போல, உண்மையான மோக்ஷத்தையும் பொய்யான ஸாதனத்தினால் அடைதல் கூடும்.

—: 0 :—

## 3-ம் சூத்திரம்—தேகாதிகளின் அநாத்மத்வ நிரூபணம்.

[தேகம், இந்திரியம் முதலியவை தன்னினும் வேறாய்க் காணப்படுவதனால் ஆத்மா வல்ல.]

1. ஓ மகனே ! இன்னும் கேள். பொன்னை யறியாதவனுக்குப் பொன்னினாற் செய்த வளையலைப் பார்த்தாலும் பொன்னென்னும் அறிவு இல்லாதது போல்.

2. பாரமார்த்திகமான பரமாத்மாவை ஆராயாதவிடத்து, இந்த வியவகாரிக வடிவமான தேக முதலிய பொய்யான ஜடவஸ்துக்களின் ஸமூகத்தைக் காண்பாய்.

3. நீரின் சம்பந்தத்தினால் பூமி இளகுவது (திரவத் தன்மை யடைவது) போல, ஆத்மாவிடத்து, ஆத்ம சம்பந்தத்தினால் அகங்கார முதலானவை அறிவென்று சொல்லப்படும்.

4. அகங்காரம் உண்மையான வஸ்து வென்று மூடர்கள் சொல்லுகின்றார்கள். இவ்வாறு காணப்படுவன வெல்லாம் ஆத்மா வல்ல வென்று விளங்கச் சொல்லுகின்றேன் ; கேள்.

5. அப்பா, சிடனே ! பிருதிவி முதலான ஐந்து பூதங்களின் பஞ்சீகரணத்தினால் உண்டான தேக முதலியவைகளை ஆத்மா வல்ல வென்று படத்தில் எழுதப்பட்ட சித்திரவடிவம் போல அறிந்துகொள்.

6. தேகத்திலிருந்து ஒரு துளி வீரியம் வெளிப்பட்டு, தேகமெனப்பட்டு, வளர்ந்து, உணவை யுண்டு, ஜீவித்து, முடிவில் அழிகின்ற இதனினும் வேறாக இந்த்ரஜால மென்பது உண்டோ?

7. கால், கை, தலை ஆகிய இவைகள் இரத்த வீரியங்களினால் உண்டாயிருப்பதனால் தேகம் நீரின் குமிழியைப் போலத் தோன்றி அடங்கும்.

8. இந்தத் தேகம் அறிவல்ல (ஆத்மாவல்ல), இந்திரியாதிகளினால் அறியப்படுகின்றபடியினால். எது அறியப்படுகின்றதோ, அது அறிவல்ல (ஆத்மாவல்ல), வெறுங் கடத்தைப் போல. இது அநுமானம்.

9. செவி முதலிய ஞானேந்திரியங்களையும், வாக்கு, கை, முதலிய பல கர்மேந்திரியங்களையும் ஆத்மா வென்பது பொருந்தாது; தேகம் போல.

10. ஓ புத்திசாலியே! சத்த முதலியவைகளை யாவது, வசன முதலியவைகளை யாவது நியமமாய்ப் பற்றிக் கொண்டிருக்கும் இந்திரியங்களின் ஸமூஹத்தில் ஆத்மத்வம் எவ்வாறிருக்கும்?

11. இந்திரியங்கள் தந்தம் விஷயாகாரமடைந்து மறைவதனாலும், தாம் உணர்வில்லாதிருப்பதனாலும் இந்திரியங்களை ஆத்மா வென்று சொல்லுவது பொருந்தாது.

12. பிராணாதி வாயுக்களை ஆத்மா வென்று சொல்லுவதும் பொருந்தாது. அவை புத்திசாலிகளினால் ஊதப்பட்ட தோற்கருவியில் இருக்கும் காற்று போலத் தேகத்தில் காணப்படுகின்றன.

13. இரேசக, பூரக, கும்பக ரூபமான பிராணாயாமத்தைச் செய்து, பிராணவாயுவை ஜெயிப்பதை லக்ஷியமாகவுடைய யோகிகளை நோக்குமிடத்து, பிராணாதிவாயுக்களுக்கு ஜடத்வமே நன்றாய்த் தோன்றுகின்றது.

14. சித்தம் முதலிய நான்கு வியாபாரங்களின் ரூபத்தை யடைந்த அந்தக்கரணம் ஆத்மா வாகாது; அது ஆத்மாவினால் அறியப்படுதலினால்.

15. மகனே! **நேதி நேதீதி நேதீதி** என்று ச்ருதி கூறும் போது, பஞ்சபூதங்கள், தேகம், இந்திரியங்களாகிய இவை ஆத்மா வென்று கூறும் வார்த்தை எவ்வாறு பொருந்தும்?

ஶ்ருதி ப்ரமாணம்

*நாத்ரகாசன பிதாஸ்தி; நபேதோ*
*ஞீவேஶயோரஸ்தி ரேதிவித்தி நாஞ்த்வம்*

—: 0 :—

## 4-ம் சூத்திரம்—அந்தக்கரணத்தின் அநாத்மத்வ நிரூபணம்

[*ஸங்கல்ப முதலிய நான்கு விருத்திகளின் ரூபமான அந்தக் கரணம் ஆத்மாவினுல் அறியப்படுதலினுல் ஆத்மா வாகாது.*]

1. *எவனது கடாக்ஷம் இந்த உலகத்தின் தோற்றத்திற்குக் காரணமாயிருப்பதோ, அந்தச் சிவஸ்வரூபரான குருஸ்வாமியே! அடியேன் விண்ணப்பத்தைக் கேட்டருளும்.*

2. *எல்லாம் உணர்ந்தவரே! அந்த நான்கு விருத்திகள் எவ்வாறு இருக்கின்றன? எவ்வாறு காணப்படுகின்றன? அந்த அந்தக் கரணம் எவ்வாறு இருந்துகொண்டு, எவ்வாறு ஆத்மாவினுல் அறியப் படுகிறது?*

3. *இவ்வாறு சீடன் கேட்க, குரு சொல்ல லுற்றனர். அந்தக் கரணம் நான்கு விருத்திகளென்று சொல்லப்பட்ட சித்தம், மனம், அகங்காரம், புத்தி யென்னும் பெயரை யடையும். ஓ சீடனே! அதனை உனக்குத் தெரிவிக்கின்றேன்.*

4. *கடம், படம் முதலிய விஷயத்தின் இருப்பு வீதியின் குப்பையைப் போல வேறுபாடின்றித் தோன்றும் நிர்விகல்ப ஞானமே சித்தமென்று சொல்லப்படும்.*

5. *இது மரக்கட்டையோ, மனிதனே, எனக்குத் தெரிய வில்லை யென்று நிச்சயிக்காமல் ஆராயும் சேதனமே மனம். மகனே! இதனை இவ்வாறு அறிந்துகொள்.*

6. *இதனை நான் அறிந்தவன், இது நான், இது எனது என்னும் பிராந்தி யோடிருக்கும் புத்தியே அகங்காரமென்று சொல்லப்படும். மகனே! இதனை யறிந்துகொள்.*

7. *இது கள்ளனல்ல, இது மரக்கட்டை, இந்த விஷயத்தில் சந்தேகமில்லையென்னும் ஞானமே புத்தி. இவ்வாறு அந்தக்கரணத்தில் இருக்கும் நான்கு விருத்திகளை யறிந்துகொள்.*

8. என் சித்தம், என் மனம், என் அகங்காரம், என் புத்தி யென்னும் அநுபவம் தோன்றுவதை, ஆராயுமிடத்து, அவை ஆத்மாவினால் அறியப்படும் பொருள்களாம்.

9. இத்தகைய நான்கு விருத்திகளையுடைய அந்தக்கரணம் மூலாகங்காரத்தின் ஓர் அமிசமேயாம். அது தானே ஜாக்ரம், ஸ்வப்னமென்னும் அவஸ்தைகளை யுண்டாக்கி, அவ்விடத்திய விஷயங்களை யறியும்.

10. அந்த அந்தக்கரணம் ஸாத்விக, ராஜஸ, தாமஸ குணங்களின் விருத்தியினால் சத்தாதி விஷயங்களைப் பற்றுதலும், விடுதலும் செய்து, அலைந்து, திருப்தி யடையாமல் துக்கத்தை யநுபவிக்கும்.

11. இவ்விதமாய் அந்தக்கரணம் வெவ்வேறு அவஸ்தைகளை யடையும். ஆகையால், அது ஆத்மாவினால் அறியப்படுவதாம். ஆகையால், அது ஆத்மா வல்ல.

—: o :—

## 5-ம் சூத்திரம்—மூலாகங்காரத்தின் அநாத்மத்வ நிரூபணம்.

[மூலாகங்காரம் ஆத்மா வல்ல; புத்தி முதலிய குணமுள்ளதாயிருப்பதனால்; அது ஜடபதார்த்தமே யாம்.]

1. சிவபெருமான் பரிபூர்ணனாயிருப்பதால் உலகம் சிவனாகாதாயினும், அதனை த்ருஷ்டி மாத்திரத்தினால் சிவனென்று அறியும் குருவே! அடியேன் விண்ணப்பத்தைக் கேட்பீராக.

2. ஓ குருஸ்வாமியே! முன்னர் அந்தக்கரணம் மூலாகங்காரத்தின் ஓர் பாகமென்று அடியேனுக்குத் தெரிவித்தீர்கள். அந்த மூலாகங்காரத்தின் ஸ்வரூபம் யாது?

3. இவ்வாறு சிடன் கேட்க, குரு சொல்லுகிறார். மகனே! நான்கு விருத்திகளையுடைய அந்தக்கரணத்தைத் தன் ஒரு அவஸ்தையென்று சொல்லுதற்கு உரிய மூலாகங்காரத்தின் விதத்தைச் சொல்லுகின்றேன்.

4. அஜ்ஞானத்தினால் பிராந்தி ஞானத்தின் இமை திறக்க (என்றால், நான் ஜீவனென்னும் பிராந்தி ஞானம் உதிக்க), அது மஹத்தத்வத்தில் ஸவிகல்ப ஜ்ஞானமென்று சொல்லப்படும். அதுவே மூலாகங்காரமாம்.

5. அதுதான் ப்ரதமாத்யாஸம்; அது தான் கல்பித புருஷன்; அதுதான் வியவகாரிக ஜீவன் என்று ஞானிகள் சொல்லுகின்றார்கள். அதுவே எல்லாவற்றிற்கும் மூலமாம்.

6. கூடாரத்துடன் அறியப்படும் வஸ்திரம் போல, அந்த மூலாகங்காரத்தின் இருப்பு அறிந்துகொள்ளப்படுகின்றது. இது கடத்தைப் போல் அறியப்படும் பொருளென்று சொல்லுதல் வேண்டும்.

7. இந்த மூலாகங்காரம் ஸ்தூல, ஸூக்ஷ்ம தேகங்களில் அறிவின் தன்மையை யடைந்து வெளியிலுள்ள சத்தாதி விஷயங்களை யறிகின்றது.

8. ஓ குருவே! ஜடபதார்த்தம் அறியும் வகை எவ்வாறு? கடம் மற்றொரு கடத்தை யறியுமோ? தாங்கள் இதனை விளக்கியருளல் வேண்டுமென்று சீடன் கேட்க, குரு சொல்லுவாராயினர்.

9. ஊசிகாந்தக்கல்லைப் பற்றிய ஓர் ஊசி மற்றோர் ஊசிக்கு அந்த ஊசிகாந்தக்கல்லின் குணத்தைத் தாங்கி ப்ரகாசிப்பது போல.

10. அறிவைப் பற்றியிருக்கும் மூலாகங்காரம் அறிவில்லாததாயினும் அறிவென்று வியவகரிக்கப்பட்டுத் தேக முதலிய ஜடவஸ்துக்களைச் சேட்டிப்பிக்கின்றதென்று, மகனே! நீ அறிந்துகொள்.

11. மகனே! கேள். இந்த மூலாகங்காரத்தின் ஒன்பது குணங்கள் ஆத்மாவினால் அறியப்படுவனவாயிருப்பதனால் மூலாகங்காரம் உண்மையா (ஆத்மாவா)வதில்லை; குணங்களையுடையதாதலின். கடத்தைப் போல.

12. புண்ணியம், பாவம், யத்தனம், துவேஷம், ப்ரவாஹரூப ஸம்ஸ்காரம், இராகம், சுகம், துக்கம், புத்தி ஆகிய இவைகள் (ஜீவனுடைய) ஒன்பது குணங்களென்று சொல்லப்படும்.

13. நான் கேட்கின்றேன் என்பதிலும், நான் தியானிக்கின்றேன் என்பதிலும், மூலாகங்காரம் அந்தந்த இந்திரியங்களுடன் வெள்ளாம்பலைப் போல வேத்தியமாயிருத்தல் சொல்லப்படுகிறது.

14. மகனே! வெந்நீர் என்பதில் நீருக்கு வெப்பகுணம் ஸ்வபாவமல்லாததனால் அந்த வெப்பம் நெருப்பினால் வந்ததாம். அது போல, நான் அறிகின்றேன் என்பதில் ஜடமான அகங்காரத்திற்கு அறிவு ஸ்வபாவமல்லாததனால் அவ்வறிவு சித்தின் சம்பந்தத்தினால் வந்தது.

15. மூலாகங்காரம் சேதனம், அசேதனம் ஆகிய இவ் விரண்டும் தன் தேகமாய் நிற்க, ஜாக்ர ஸ்வப்பனங்களில் ஒன்றாய்த் தோன்றி ஸுஷுப்த்யாயவஸ்தையில் அடங்குவதனால், கிரிசிய புதார்த்தமாயிருக்கின்றது.

16. இவ்வாறு தோன்றி யடங்குவதனால் (மூலாகங்காரம்) ஆத்மா வென்று எவ்வாறு ஒத்துக்கொள்ளலாம்? குருவே! நீ இவ்வாறு அறிந்துகொள்.

17. பெரியோர் புகழுமாறு ஐம்பத்தெட்டு பாசுரங்களுடன் ஐந்து சூத்திரங்களினால் இந் நான்காவது அதிகாரம் இயற்றப்பட்டது.

நான்காவது அதிகாரம் முற்றிற்று.

—: o :—

## 5-வது அதிகாரம்

### 1-ம் சூத்திரம்—விஞ் நிரூபணம்

[இந்த மூலாகங்காரம் நித்திரையில் இல்லையே. அறிந்துகொள்ளும் அறிவுக்கு அங்கு இடமில்லாமையினால் அதன் இருப்பையறிவது எவ்வாறு?]

1. அழியாமலும், அழிவிற்குத் தப்பாமலும், அஜ்ஞானத்தையடையாமலும், எச்சரிக்கையால் கலவரப்படாமலும் இருக்கும் அறிவே தானான ஹம்புலிங்க ஸ்வாமியின் திருவடித்தாமரைகளை வணங்குகின்றேன்.

2. அஜ்ஞானத்தை யொழிப்பவரே! அறிவாநந்தத்தை யுண்டாக்குபவரே! ஞானிகளுக்குப் புகலிடமானவரே! குருஸ்ரேஷ்டரே! தேவரீர் அடியேன் விண்ணப்பத்தைக் கேட்பீராக.

3. மூலாகங்காரம் நித்திரையில் இல்லையாதலின், கிரிசியமானதென்று அறியத்தக்க தொன்று வேண்டும். அது எவ்வாறாகும்? சந்தேகமறத் தெரிவித்தல் வேண்டும்.

4. ஸ்வாமி! ஆழ்ந்த நித்திரையில் அறிவு இருக்குமாயின், தன் தேகத்தின் மேலுள்ள ஆபரணங்களைச் சோரன் திருடும்போது மனிதன் அறியாதது என்?

5. மேலும், நித்திரையில் அறிவில்லை யென்று சிலர் சொல்லு கின்றனர்; அவ்விடத்தில் மூலாகங்காரம் இல்லாமை எப்படித் தோன்றும்? தயவுசெய்து சொல்லவேண்டும்.

—:O:—

## 2-ம் சூத்திரம் ஜ்ஞானஸத்பாவ நிரூபணம்

[அந்த நித்திரையில் அறிவு இல்லை யென்பது எவ்வித விசாரணையினாலும் சம்பவிப்பதில்லை.]

1. மகனே! கேள். அகங்காரத்தின் இன்மையை நித்திரையி லிருந்து அறியும் ஆத்மா உண்டு. இது உண்மை, ஸமத்காரம் தோன்றும்படி உனக்குச் சொல்லுகின்றேன்.

2. அறிவு இல்லை யென்று கூறின், ஒன்றும் அறியாது சுக மாய்த் தூங்கினேன் என்னும் நினைவு இருத்தலினால், மகனே! நித்திரையில் அறிவு உண்டு. கேட்பாயாக:

3. நான் அந்த நித்திரையில் யாதொன்றையும் அறியா திருந்தேன்; சுகமயமாயிருந்தேன் என்று சொல்லுதலினால் ஆத்மா இருப்பதென்பதற்கு என்ன திருஷ்டாந்த மெனின், சொல்லு கின்றேன்; கேள்.

4. என் செய்தாய்? என்னும் வினாவுக்கு ஒன்று மில்லை யென்று சொல்பவன், தனக்கு யாதொரு கேடுமில்லாமலும், ஒரு வேலையும் தான் செய்யாமலும் தான் இருப்பதைத் தெரிவிப்பது போல.

5. நான் ஒன்றையும் காணவில்லை யென்று சொன்னது மூலாகங்காரத்தின் லயமுள்ள ஸுஷுப்தியில் தானிருந்த நினைவினா லேயே என்று, மகனே! நீ அறிந்துகொள்.

6. லம்பிகாயோகி தானென்னும் பாவமே தனக்குத் தோன்றா திருப்பினும் அந்த யோகத்தில் தான் உண்ணும் அமிர்தத்தினால் கெடுநாள் ஆநந்தத்துடன் இருந்ததைச் சித்தம் வெளிமுகமான போது நினைந்து சொல்வது போல.

7. ப்ரமஸுக நித்திரையிலிருந்தேன் என்னும் நினைவு அந்த ஸுஷுப்தியாகிய மனைவியின் ஸம்போகத்தினால் உண்டான ஆநந்தத்தை யறிவிக்கும்.

8. அவ்வாறு நினைவு (காரியத்தை நோக்கிக் காரணத்தைத் தெரிவதென்னும்) அர்த்தாபத்தி ப்ரமாணத்தை யறிவிப்பதனால் ஆழ்ந்த நித்திரையில் அறிவு உண்டு.

9. அந்த நித்திரையில் சந்தேகமில்லாது ஆநந்த ஸ்வரூபமான ஆத்மா தன்னாலேயே தான் ப்ரகாசிக்கின்றது. இதனை ஶ்ருதி நஹித்ருஷ்டம் என்று கூறுகின்றது.

ஶ்ருதி ப்ரமாணம்

நஹித்ருஷ்டம் ஸுஷுப்தௌ ச
காரணம் மன ஆதிகம் ।
ஆநந்தமய சின்மாத்ரஸ் ஸ்வய
மேவாவ பாஸதே ॥

—: 0 :—

## 3-ம் சூத்திரம்—ஜ்ஞாநஜ்ஞான ஸத்பாவ நிரூபணம்

[நித்திரையில் அறிவு இல்லை யெனின், அறிதல் உண்டாகாதாதலின், நித்திரையில் அறிவு இருக்கிறதென்பது பெறப்படும்.]

1. குழந்தாய்! கேள். இவ்வாறு கூறினதை ஒத்துக்கொள்ளாமல், அறிவின் இல்லாமை அந்த நித்திரையில் உனக்குத் தோன்றுகின்றதென்று நீ கூறுவாயாயின், சொல்லுகிறேன்; கேள்.

2. நித்திரையில் அறிவில்லாததை யறிந்தேன் என்று நீ சொன்னால், அது பொருந்தாதென்பதைத் தெரிவிக்கின்றேன்; கேள்.

3. எது இல்லாமையோ? அதனை விசாரிக்குமிடத்து, அது பிரதியோகியின் அழிவேயாய் அதன் விசேஷணமான இடத்தில் காணப்படுகின்றது.

4. விசேஷணாத்மகமான ஜ்ஞானமெல்லாம் தன் அகங்காரங்களோடு ஏதேனுமோரிடத்தில் உபகரணங்களினால் அறியப்படுதல் வேண்டும்.

5. யாதொரு பாவமும் (இருப்பும்) இல்லாத இடத்தில் காணம் முதலியவை அதன் இருப்பின் நினைவை (அவ் வில்லாண்மை இருக்கிற தென்னும் நினைவை) யடைதற்கு உபகரணம் யாதெனின், சொல்லுகின்றேன்; கேள்.

6. ஒரு பதார்த்தத்தின் இருப்பை அறிதற்கு என்னென்ன உபகரணமிருத்தல் வேண்டுமோ, அவ்வளவு உபகரணம் அதன் இல்லாமையை யறிதற்கும் இருத்தல் வேண்டும்

7. அந்த நித்திரையில் அறிவின் இல்லாமை இவ்வாறன்றி வேறுவிதமாக அறியப்படுவதில்லை; கேள். சாமக்கிரிகளெல்லாவற்றையும் அடைந்திருப்பது நித்திரை யன்று; ஜாக்ரமே யாம்.

8. ஒரு பொருளின் இல்லாமையை ஆராயுமிடத்து, அப்பொருள் இருக்கும் இடம் ஒன்று வேண்டும். அந்த ஸுஷுப்தியில் அறிவின் இல்லாமையை அறிதற்கு அது வேறிடத்திலும் காணப்படுவதில்லை.

9. நித்திரையில் அறிவு உண்டென்னும் வழக்கமிருத்தலினால் அறிவு இல்லை யென்று சொல்லலாகாது. அறிந்துகொள்ளும் அகங்காரம் இல்லாதிருக்கும் அவஸ்தையே நித்திரை யென்று சொல்லப்படும். உண்மையில் அந்த நித்திரையை அறிவு (ஸாக்ஷாத்தாய்) அறிந்துகொள்கிறது.

10. நித்திரையில் அறிவு உண்டு. தெரிந்துகொள்ளும் அறிவு இல்லை யென்று நினைக்கவேண்டாமென்று குரு உபதேசிக்க, சீடன், குருஶ்ரேஷ்டரே! தேவரீரே அந்த விஷயத்தைத் தெரிவித்தல் வேண்டுமென்று கேட்க, குரு பின்வருமாறு விடையளிக்கலாயினர் :—

11, 12. கோழி சிதறி யிருந்த தன் குஞ்சுகளை யழைத்து வெளியில் போகாதபடி தன் இறகுகளில் அணைத்துக்கொண்டு, ஓரிடத்தில் நித்திரை செய்வதுபோல ஸுஷுப்தியில் பிரகிருதிதத்துவம் தன் விகாரமான புத்தி முதலிய தத்துவங்களை யெல்லாம் உட்படுத்திக்கொண்டு, யாதொரு அவஸ்தையுமில்லாது, ஸத்ரூபமான அறிவை ஆஶ்ரயித்துக்கொண்டிருக்கின்றது.

13. இராகுவினால் பிடிக்கப்பட்ட சந்திரன் அந்த இராகுவை ப்ரகாஶிக்கச் செய்வது போல், ஆராயுமிடத்து, நித்திரை

தன்னை மூடவும் அந்த மகாமோகத்தை (நித்திரையை) அறிவே யறிந்துகொள்கிறது.

14. நித்திரையில் சித்து, அசித்து ஆகிய இவைகளிரண்டும் இருப்பது உண்மையாயிருக்க, அவ்விடத்தில் நான் அறிந்தேன் என்னும் பாவம் ஏன் சம்பவிப்பதில்லை யென்னும் ஸங்கை நிகழுமாயின், சொல்லுகிறேன்; கேள்.

15, 16. கிணற்றில் விழுந்த ஆபரணத்தைத் தேடுதற்காகக் கிணற்றின் நீரில் மூழ்கினவன் ஆபரணம் இருக்கிறது அல்லது இல்லை யென்னும் சங்கதியை வெளியில் வந்தாலல்லது சொல்ல முடியாது. அதனைப் போல, அறிவு நித்திரையில் மூழ்கிப் போயிருக்க, அந்த நித்திரை நீங்கினன்றி, அந்த ஸுஷுப்தியில் அறிந்த பொருளைச் சொல்லமுடியா தென்பதே முடிவு.

17. ஓ சீடனே! நீ இவ்வாறு அறிந்துகொள். ஶ்ருதி ப்ரஜ்ஞாநாத்மனா என்பது முதலிய வாக்கியங்கள் கூறுவதனால் ஸுஷுப்தியில் நித்திரையின் சுகத்தைச் சொல்ல முடியாது.

ஶ்ருதி ப்ரமாணம்

ப்ராஜ்ஞாநாத்மனா வித்யாவ்ருதத்வாத்
ஸுஷுப்தௌ வக்துமஶக்யம் ।

ப்ரஜ்ஞான ஸ்வரூபனான ஆத்மா ஸுஷுப்தியில் பேரிருட்டினால் மூடப்படுவதனால் ஸுஷுப்தி ஸுகத்தைச் சொல்லமாட்டானென்பது பொருள்.

—: o :—

## 4-ம் சூத்திரம்—வினா நிரூபணம்

[ஓ குருவே! ஸுஷுப்தியை யறிதற்கு ஆத்மாவுக்குக் காரணம் (ஸாதனம்) எது? தயவுடன் அடியேனுக்குச் சொல்லவேண்டும்.]

1. குருஶ்ரேஷ்டரே! சூரிய சந்திரர்களின் ப்ரகாஶமுள்ள கிரணங்களினாலும் நீக்கமுடியாத அஞ்ஞான இருளை உமது அருட் பார்வை அழிக்கும்.

2. என்று புகழ்ந்து, ஆநந்தமய பக்திரஸத்தினால் மனங் குளிர்ந்த சீடன், குருவே! அருள்செய்யுங்களென்று விண்ணப்பித்தான்.

3. ஒ குருவே! ஆத்மா நித்திரையை யறிகின்றதென்று அநேக யுக்திகளுடன் போதித்தீர்களன்றோ ? அந்த ஸுஷுப்தியில் அறிவுக்குக் காரணங்களிருக்கின்றனவோ ?

4. காரணங்களின் வியாபாரமிருக்குமாயின், நித்திரை யல்லவென்று சொன்னீர்கள். அத்தகைய பாவத்தை (இருப்பை) அறிவு காரணங்களில்லாது எங்ஙனம் அறியும் ?

5. காரணங்களே யில்லாதிருக்கையில் ஆத்மா நித்திரையை யறிவது எப்படி ? மறுபடியும் அந்த நினைவு தோன்றுதற்கு வழி உண்டோ ?

6. நித்திரையில் காரணங்களின் அபேக்ஷை இல்லாது ஆத்மா அறியலாமெனின், ஸுஷுப்த்யாவஸ்தை நீங்கினன்றி, அந்த நினைவு உண்டாகாதென்னும் நியமம் வேண்டாம்.

7. ஆத்மா தானே அறிகின்றது, தானே மறக்கின்றது, மறுபடியும் தானே அதனை நினைக்கின்றது என்று கூறின், ஆத்மா தானே புத்தி முதலிய குணமுள்ளதாயிற்றென்று சொல்லவேண்டும்.

8. அங்ஙனமாயின், ஆத்மா ஜடத்வத்தை யடைகின்றது போலத் தோன்றுகின்றது. ஒ குருஶ்ரேஷ்டரே ! தாங்கள் இந்த விஷயத்தைத் தயவுடன் அடியேனுக்குத் தெரிவித்தல் வேண்டும்.

—: o :—

## 5-ம் சூத்திரம்—அநுபூதார்த்த ஸ்மரண நிரூபணம்

[அழுந்திய நித்திரையில் அறிதற்குக் காரணம் உண்டு. அதனை உனக்குச் சொல்லுகின்றேன் ; சீடனே ! அதனை நீ சந்தோஷத்துடன் கேள்.]

1. மகனே! அந்த நித்ராநுபவத்திற்கு உரிய ஸாதனத்தையும், அந்த நித்திரை தெளிந்த பிறகு, நினைவு தோன்றுகின்ற விதத்தையும் சொல்லுகின்றேன் ; கேள்.

2. ஜாக்ராவஸ்தையிலும், ஸ்வப்னாவஸ்தையிலும் தோன்றுகின்ற தேகத்தைப் பற்றியிருக்கும் ஜீவனைக் கர்மவசத்தினால் சில சமயங்களில் அழுந்திய நித்திரை மூடிக்கொள்ளும்.

3. அந்த நித்திரையில் மூலாகங்காரம் தான் ஸகல கர்மாபிமானத்தின் ஸம்ஸ்காரத்தோடு தனது காரணத்தில் (பிரகிருதியில்) யாதும் சொல்லாது (செயலின்றி) ஒன்றுயடங்கும்.

4. அந்த அகங்காரத்திலிருக்கும் (ப்ராஜ்ஞ) ஜீவனாகிய ஆத்மா தனது உண்மை இடமாகிய ப்ரஹ்மத்தில் லீனமானது போலக் காணப்படும். இவ்விதமாய் ஆத்மா ஸுஷுப்தியை யறிகின்றது.

5. ஓ சீடனே! அந்த மாயை ஸுஷுப்தியில் சித்ரூபத்தையும், பிரவிருத்தியையும் உடையதாகி ப்ரகாசிக்கின்றதென்று சைவ புராணம் கூறுகிற்கும்.

6. அந்த ஸுஷுப்தியில் அந்த மாயைக்கு அந்த விகாரம் நியமமாயிருத்தலினாலன்றோ? தாமஸ (நித்ரா) ஸுகத்தை நித்தியமாயிருக்கும் சித்து அநுபவிக்கின்றது.

7. அந்த ஸுஷுப்தியில் மாயையின் பிரவிருத்தி யெல்லாமும் க்ஷணகோசமே யிருப்பதாதலின், ஆத்மாவினால் அறியப்படும் ஸுகஜ்ஞானங்களெல்லாம் க்ஷணிகமென்று சொல்லவேண்டும்.

8. மரத்தின் இலைகள் அசையும்போது (அவற்றின் இடையே தோன்றி மறையும்) நிலவின் ஒளி போலத் தோன்றி யழியும் ஸுகாநுபவத்திற்கு மாயையே காரணமாகியும், கர்மமாகியு மிருக்கின்றது.

9. தீபமொன்றே கர்ம ரூபமாகவும், கரண ரூபமாகவும் தோன்றுவது போல, ஆத்மாவுக்கு மாயையே கர்ம ரூபமாகவும், கரண ரூபமாகவுமிருக்கின்றது. (வெளிச்சத்தின் சகாயத்தினால் வெளிச்சத்தைக் காண்பது போல ஆத்மா மாயையின் சகாயத்தினால் மாயையைக் காண்கின்றது.)

10. அந்த ஸுஷுப்தியில் அதன் (நித்திரை சுகத்தை யறிந்த) ஸம்ஸ்காரமெல்லாமும் பிரகிருதியிலிருத்தலினால் கர்மாநுஸாரமாய் ஜாக்ராவஸ்தைக்கு வந்த ஆத்மாவுக்கு அவ்விடமில்லாத நினைவை யுண்டாக்குகின்றது.

11. அது ப்ரத்யபிஜ்ஞை யென்று சொல்லப்படும். அதனை ஆராயுமிடத்து, முன்னே தான் அநுபவித்த பொருளைப் பார்த்து அதனோடு சேர்ந்து பின்னே நினைப்பதாம்.

12. (முன்னே ஒரு தேசத்தில் பார்த்த மனிதனை மற்றோர் காலத்தில் மற்றோர் தேசத்தில் பார்க்கும்போது) அவனே இவனென்று சொல்லுவது ப்ரத்யபிஜ்ஞைக்கு த்ருஷ்டாந்தம், இது

போல, ஆத்மாவுக்குச் சுகநித்திரையை யநுபவித்த ஸ்மரணை யுண்டாகின்றது.

13. மகனே! அநுபவிக்கப்படாத பொருள் எக்காலத்திலும் நினைவுக்கு வாராது. அந்த அழுந்திய நித்திரையில் நித்ரா ஸுகத்தை யறியாதிருப்பின், முற்கூறிய ஸ்மரணை எங்ஙனம் சம்பவிக்கும்?

14. காரணமாயிருக்கும் பிரகிருதியும், சரீரமாயிருக்கும் ஸம்ஸ்காரமும், ஜாக்ராவஸ்தையில் திறக்கப்பட்ட மனோரூபமான காரணத்திற்கு எப்படி ப்ராப்த மாகுமென்னும் ஸங்கை நிகழுமாயின், சொல்லுகிறேன்; கேள்.

15. ஸுஷுப்தியிலிருந்த பிரகிருதி தானே மீள்வும் விகாரத்தை யடைந்து மனோரூபமாவதனால் அந்த நித்ரா ஸுகாநுபவத்தின் ஸம்ஸ்காரங்கள் நினைவுக்கு வருகின்றன.

16. (மரம், உலோகம் முதலியவைகளினு லாக்கப்பட்ட) வடிவம் அச்சில் (கட்டளைக்கருவியில்) சுத்தமாய்க் காணப்படுவதுபோல அழுந்திய நித்திரையிலிருந்த ஸம்ஸ்காரம் ஜாக்ராவஸ்தையி லிருந்த புத்தியில் (நினைவாய்த்) தோன்றுகின்றது.

17. ஓ மகனே! இவ்வாறு (ஜாக்ர, ஸ்வப்ன ஸுஷுப்தியென்னும்) மூன்று அவஸ்தைகளிலும் தானே தோன்றுவதனால் ஆத்மா ஸச்சிதாநந்த ஸ்வயம் ப்ரகாஶ ஸ்வரூபமானதென்பது பெறப்படுகின்றது.

18. அந்தக் காரணத்தினால் நீயே ஸத்தாகவும், நிர்மலனாகவும், பரிபூர்ணனாகவு மிருக்கின்றாய். ஆதலால், நித்தியனுமாகின்றாய். மறைப்பென்பது உன்னிடத்தில் இல்லை. இது உண்மை.

19. இது ஐந்தாவது அதிகாரம். இதில் ஐந்து சூத்திரங்களும், ஐம்பத்தெட்டு பாசுரங்களும் இருக்கின்றன. இது சித்தசித்து விவேக ப்ரகரணமென்று சொல்லப்படும்.

ஐந்தாவது அதிகாரம் முற்றிற்று.

—: 0 :—

# 6 - வது அதிகாரம்

## 1-ம் சூத்திரம்—வினா நிரூபணம்

[ஓ ஆசாரிய ஶ்ரேஷ்டரே! தேவரீர் அடியேனுக்கு மறைப்பு இல்லை யென்று தெரிவித்தீர்கள். அது எப்படி? அதனைக் கருணை யுடன் தெரிவித்தல் வேண்டும்.]

1. பரிபூர்ணஜ்ஞான முள்ளவனுகியும், மட்டற்ற அத்யந்த ஶ்ரேஷ்டமான ஆநந்தமுள்ளவனுகியும், பரதத்வ ஸ்வரூபனுகியும், ஆத்மாக்களைப் பரிசுத்தமாக்குபவனுகியு மிருக்கும் பார்வதீபதியான சிவ பெருமானை வணங்குகின்றேன்.

2. ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்ரன், ஸதாஶிவன், மஹேஶ்வன் முதலியவர்களுக்கு இருப்பிடமான திருமேனியை யுடைய குருவே! அடியேன் விண்ணப்பத்தைக் கேட்பீராக.

3. ஆத்மாவுக்கு அஜ்ஞானத்தின் சம்பந்தம் இலேச மாத்திரமும் இல்லை யென்று கூறினீர்கள். அவ்வாருயின், ஜனன மரணாதிகளுக்குப் பயந்து, அறிவு கலங்கி, தங்களை யடைந்தவர் யார்? தெரிவிப்பீராக.

4. பொறுக்கக் கூடாத ஜனனமரணாத்மகமான ஸம்ஸாரம் அகங்காரத்திற்குச் சம்பவிக்கின்றதென்று கூறின், மோக்ஷமும் அகங்காரத்திற்கே யாகும். அதனை யொத்துக்கொள்ளின், அகங்காரம் ஸத்யமான வஸ்து வென்று கூறவேண்டும்.

5. ஸ்வாமி! முன்னரே அகங்கார முதலிய தோற்றங்கள் நித்தியமல்ல வென்று அடியேனுக்குத் தெரிவித்திருக்கின்றீர்கள். ஆகையால், அகங்காரம் ஸத்யமென்றும் சொல்லவொண்ணது.

6. அகங்காரத்திற்கு ஸம்ஸாரம் சம்பவிக்கின்றது; ஆத்மாவுக்கு மோக்ஷமுண்டாகின்றதென்று கூறின், ஒருவன் கொள்ளை யடிக்க, அபவாதம் மற்ருெருவனுக் கென்று கூறுவதை யொக்கும்.

7. ஓ குருவே! தாங்கள் தாமதிக்காமல் சந்தேகமில்லாதபடி உபதிஷ்டப் பொருளைக் கூறி இரக்ஷித்தல் வேண்டுமென்று சீடன் குருவை வணங்கினன்.

—: o :—

## 2-ம் சூத்திரம்—ஆத்மாவுக்கு ஸம்ஸாரத்யால நிரூபணம்

[ஸம்ஸாரம் அந்த உத்க்ருஷ்ட ஜ்ஞான ஸ்வரூபனான பரமாமத்மாவுக்கு உபாதியினாலுண்டானதாம். ஆயினும், அது உண்மையானதல்ல.]

1. ஓ மகனே! கேள். இந்த வினாக்களுக்கெல்லாம் சரியான விடையை, இது ரஹஸ்யமான அபிப்பிராய மென்று, நீ அறிந்து கொள்ளுமாறு, சந்தோஷத்துடன் கூறுகின்றேன்.

2. அகங்காரத்திற்கு ஸம்ஸார பந்தம் உண்டாகுமோ? அப்படிக் கூறுவது குற்றமாம். அதனை விசாரிக்குமிடத்து, அகங்காரத்தைப் பற்றியிருக்கும் ஆத்மாவில் அந்த ஸம்ஸாரம் உபாதி வசத்தினால் இருக்கும்.

3. ஓ சிடனே! கேள். அத்யாஸம், பிரதிபிம்பம், அவச்சின்னம் என்னும் பேதத்தினால் உபாதி ஆத்மாவில் மூன்று விதமாய்ச் சம்பந்தித்துக் கொண்டிருக்கும்.

4. பிரவிருத்திதருமம் உள்ளதென்று சொல்லப்பட்ட பிரகிருதியின் வசமாவதனால் ஆத்மா அந்தப் பிரகிருதியின் பரிமாணமுள்ளதாகப் பாவிக்கப்படுவதே அவச்சின்னம் என்னும் உபாதியென்று அறிந்துகொள்.

5. பரிசுத்தனான ஆத்மா தானே அகங்காரத்தில் பிரதிபலித்து அதில் ஐக்யத்தை யடைவதே பிரதிபிம்பம் என்னும் உபாதியாம்.

6. அந்த அகங்காரத்திலிருக்கும் தர்மம் ஒன்றும் எஞ்சாது ஆத்மாவில் ஸத்ய மென்னும்படி பிரதிபிம்பிப்பதே அத்யாஸம் என்னும் உபாதியாம்.

7. அத்யாஸத்தின் இலக்ஷணம் அறியமுடியவில்லை யென்று சிடன் கூற, அவனுக்குக் குரு சந்தோஷ மேலிட்டு அடியில் வருமாறு விடையளித்தனர் :—

8. அது வல்லாத பொருளில் அது வென்னும் புத்தியுண்டாவதே (ஒரு வஸ்துவிடத்தில் மற்றோர் வஸ்து வென்னும் புத்தி உண்டாவதே) அத்யாஸம் என்று அறிந்துகொள். இந்த விஷயத்தில் சிப்பியில் வெள்ளி யென்னும் புத்தி உண்டாவதே திருஷ்டாந்தம்.

9. ஓ மகனே! இதுவே அத்யாஸமாம். இது போல, ஆத்மாவில் ஜடமான அகங்காரத்தின் குணங்கள் சேர்ந்து ஸத்யமாயிருப்பது போலத் தோன்றும்.

10. சுத்தமான கண்ணுடியின் நடுவில் யானையும், தடாகத்தில் விருக்ஷமும் எப்படிப்பிரதிபிம்ப ரூபத்தினுற் காணப்படுவனவோ, அப்படியே ஆத்மாவில் (அகங்கார முதலிய) உலகம் எல்லாமும் தோன்றும்.

11. அதுவே ஆத்மாவுக்கு உபாதி யென்னும் ஸம்ஸாரமாயிருக்கும்; அது நல்லவனுக்குக் கெட்டவனுடைய சேர்க்கை துன்பமாய் முடிவது போல.

12. சீடனே! (ஆத்மாவிடத்தில்) ஸம்ஸாரம் ஆரோபிக்கப்பட்டதாயிருப்பதென்று அறிந்துகொள். அஸ்ய ஜீவத்வம் என்று உபநிஷத் வசனம் கூறுகின்றது.

### ஶ்ருதி ப்ரமாணம்

அஸ்ய ஜீவத்வம் ஸம்ஸ்ருத மாரோபிதம்
ஶுக்திகா ரஜதவத்।

13. இவ்வாறு ஆத்மாவில் ஸம்ஸாரம் தோற்றமாயிருப்பதனுல் வேதாந்தஶ்ரவணம், குருபதேஶம் ஆகிய இவற்றினுல் அகங்காரம் அழிய, ஆத்மா மோக்ஷ மடையும்.

14. ஓ மகனே! மோக்ஷ விருப்பமுள்ள நீ அறிந்து (ஞானத்தினுல்) முக்தனுவாயென்பது முக்தஸ்ஸமுச்யதே ஜந்து என்னும் ஶ்ருதிவசனத்தினுற் பெறப்படுகின்றது.

### ஶ்ருதி ப்ரமாணம்

முக்தஶ்சமுச்யதே ஜந்து ரபிமானேன நான்யதா॥
(நான் ஜீவ னென்னும் அபிமானத்தினின்று விடுபடுதலினுல் ஸகல ஸம்ஸார பந்தத்தினின்று விடுபடுகிருன். வேறு எதனுலும் விடுபடுவதில்லை.)

—: 0 :—

## 3-ம் சூத்திரம்—உபாதி நிராகரண நிரூபணம்

[அந்த உபாதியானது ஸத்யமென்று சொல்வது பொருந்தாது; ஏனெனின், அது மோக்ஷத்திற்குப் பாதகமாகும்.]

1: புத்திசாலியான சீடனே! கேள். எமது கொள்கையில் அந்த ஸம்ஸாரம் மித்தையாம். ஏனெனின், அந்த உபாதியானது ஆத்மாவைப் பற்றுவதில்லை. அதனைச் சொல்லுகின்றேன்.

2. அந்த ஸம்ஸாரத்தை ஸத்யமென்று கூறின், பரிபூர்ண மான அறிவுக்கு உன் கொள்கைப்படி, இகபர கதிகள் எப்படிக் கிடைப்பன?

3. இகபர கதிகள் அகங்கார முதலிய உபாதியினால் ஆகு மெனின், அவ் வுபாதி உண்மையோ? பொய்யோ? உண்மையாயிருப் பதைச் சொல்.

4. அவ் வுபாதி ஸத்யமென்னும் பட்சத்தில் ஆத்மாவுக்கு அதனாற் சம்பவித்த (இகபர) கதியையும் ஸத்தியமானதென்று நீ உடன்படவேண்டும்.

5. அதனை யுடன்படின், ஆத்மா வ்யாபக மென்பது கூடாது. இதனையும் உடன்படின், ஆத்மா விகாரங்களை யெல்லாம் அடைந்தவ னென்பது பெறப்படும்.

6. இந்தக் கொள்கையையே நீ உடன்படின், ஆத்மா மித்தை யென்று சொல்லவேண்டும். அதனை ஒத்துக்கொள்ளின், அது சித்தாந் தத்திற்கு விரோதமாகும். இதற்கு என்ன உபாயம்? சொல்.

7. எப்படி ஸ்படிகத்தில் தோன்றும் செந்நிறம் பொய்யா கியும், செம்பருத்திப்பூ உண்மையாகியுமிருப்பது போல, உபாதி உண்மையாயும், ஆத்மாவில் தோன்றும் சலனம் மித்தையாயு மிருக்கிறது.

8. உண்மையல்லாத செந்நிறத்தையே காரணமாய்க் கொண்டு உண்டான செந்நிறம் ஸ்படிகமென்னும் வார்த்தையும் மித்தையாம்.

9. அவ்வாறே, பொய்யான இகபர கதிகளினாலாகும் ஸகல போகங்களும் பொய்யென்பதாம்; நீயே அந்தக் கதிகளைப் பொய் யென்று சொல்வதனால்.

10. இவ்வாறான உபாதிக்கு வேதாந்த மதத்தில் ஸத்யத்வம் எப்படி சம்பவிக்கும்? மகனே! நான் கூறியபடி எல்லாமும் பிராந்தி யினாலானவை யென்று அறிந்துகொள்.

—: 0 :—

## 4-ம் ஸூத்திரம்—கைவல்ய நிரூபணம்

[உபாதியினால் உண்டான ஸம்ஸாரத்தைக் கெடுப்பதற்காக இங்கே ஸமாதி பேதங்களை நிரூபிக்கின்றேன்.]

1. ஓ சிஷ்யனே! கேள். உபாதியினால் உண்டானதென்று சொல்லப்படும் ஸம்ஸாரம் சற்றேனும் இல்லாதபடி செய்யும் ஸமாதியை நான் இங்கே உனக்குச் சொல்லுகின்றேன்.

2. ஜீவாத்மா, பரமாத்மா ஆகிய இருவரும் ஸமதையால் அது மேலான ஸமாதி யென்று சொல்லப்படும். இரண்டென்னும் புத்தியின் வல்லபமே ஸமதையாம்.

3. உபாதியினாலாய ஸம்ஸாரம் நாசமாவதனிமித்தம் சொல்லப்படும் அந்த நிஜஸமாதி ஸகுணமென்றும், நிர்குணமென்றும் (ஸவிகல்பமென்றும், நிர்விகல்ப மென்றும்) இரண்டு விதமாயிருக்கும். இதனை நீ அறிந்துகொள்.

4. உபதேசத்திற்கு அருகனானவனே! ஸகுணரூபமான (ஸவிகல்ப) ஸமாதி த்ருஸ்யாநு வேதம், ஸப்தாநு வேதமென்று இரண்டு விதமாம்.

5. ஸவிகல்ப ஸமாதி இரண்டு, நிர்விகல்ப ஸமாதி ஒன்று, இப்படி மூன்று ரூபமான ஸமாதிகள் புறத்தும், அகத்தும் தோன்றும். இவைகளின் ஸ்வரூபத்தைத் தெரிவிக்கின்றேன்; கேள்.

6. மனதில் எக்காலத்திலும் உதிக்கின்ற காம க்ரோத முதலியவை என்னால் பார்க்கப்படுவனவாம். அவற்றிற்கு நான் ஸாக்ஷியாயிருக்கின்றேன் என்னும் அநுஸந்தானமே முதலாவதான ஸவிகல்ப ஸமாதி (அந்தரங்க த்ருஸ்யாநுவேத ஸவிகல்ப ஸமாதி)யாம்.

7. மஹத்தத்வம் அஹங்கார முதலியவைகளுடன் சேராதிருக்கும் ஸச்சிதாநந்தமான பரமாத்மாவே நான் என்னும் அநுஸந்தானமே இரண்டாவதான ஸவிகல்ப ஸமாதி (அந்தரங்க ஸப்தாநுவேத ஸவிகல்ப ஸமாதி) யாம்.

8. ஸ்வாநுபவ ஸுகத்தினால் அநுமானிக்கப்படுவதும், முற்கூறப்பட்ட இருவகை அநுஸந்தானங்களுமில்லாது, சலனமற்ற தீபம் போலத் தான் இருப்பது மாகிய நிலைமையே நிர்குண ஸமாதி (அந்தரங்க நிர்விகல்ப ஸமாதி) யாம்.

9. இவ்வாறு இம் மூன்று யோகங்களும் அந்தரங்க ஸமாதிக ளென்று அறிந்துகொள். அவ்வாறே, மூன்று பஹிரங்க ஸமாதிகளை யும் சொல்லுகின்றேன் ; கேள்.

10. வெளியிலுள்ள எந்தப் பதார்த்தத்தை யாயினும் பார்த்து, அதன் ரூபத்தை வேறாக்கி, அதில் இருக்கும் அஸ்திபாதிகளை (இருப்பு, விளக்கம் ஆகிய இரண்டை) ஆத்மா வென்று அறிவதே முத லாவதான பஹிரங்க ஸவிகல்பம் (பஹிரங்க த்ருஸ்யாநுவேத ஸவிகல்ப ஸமாதி) என்பதாம்.

11. பரப்ரஹ்மம் ஸச்சிதாநந்த பரிபூர்ண நித்தியமாயிருப்பது என்னும் அநுஸந்தானமே இரண்டாவதான பஹிரங்க ஸவி கல்பம் (பஹிரங்க ஸப்தாநுவேத ஸவிகல்ப ஸமாதி) என்பதாம்.

12. முதல் இரண்டு ஸகுணங்களையும் விட்டு, பரவஸமாய் நின்று, அலையற்ற கடல் போல, ஆநந்தமாயிருக்கும் பெருமையே பஹிரங்க நிர்விகல்பம் (பஹிரங்க நிர்விகல்ப ஸமாதி) என்பதாம்.

13. பஹிரங்க அந்தரங்கங்களான இரண்டு ஸமாதிகளினால் தேக குணங்களெல்லாம் நீங்கி, உண்மை நிலை அடைவதனால் (ஆத்மா ஸாக்ஷாத் காரமாவதனால்) மனம் எந்தப் பக்கம் திரும்பினும், அதுவே யோகம் (ஸகஜ ஸமாதி) என்பதாம்.

14. இந்த ஸமாதியின் வல்லமையினால் உண்மை ஞானம் தோன்றிப் பேதபாவனை அழிதலால் அகத்திலும், புறத்திலும் ஜீவாத்ம பரமாத்மாக்கள் ஏகமாவார்கள்.

15. அதன்மேல், இதயக்கிரந்தி அழியும். (ப்ருதிவ்யாதி) தத்துவங்களெல்லாமும் ஆத்மாவினும் வேறானவை யென்பதைக் காட்டாதிருக்கும் அகங்காரமே இதயக்கிரந்தி யென்று சொல்லப் படும்.

16. இதயக்கிரந்தி அழிந்தவுடன் நான் ப்ரஹ்மமோ, அல்ல வோ, இப்படிச் சுகமில்லையோ என்னும் சந்தேகங்கள் உண்டாகா தொழியும்.

17. அந்தச் சந்தேகங்கள் நீங்கின வுடனே கர்மங்கள் நாசமாகும். அதனால், ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் என்னும் உத்தமமான முக்தி கிடைக் கும்.

18. ஒ மகனே! இங்ஙனம் நிகழ, பேதஞானத்தில் உண்டான அக்கங்களெல்லாமும் நஷ்டமாய்க் கவலை யின்மையினுல் ஒன்றே யாகியும், இரண்டாம் வஸ்து வில்லாததாகியுமிருக்கும் பரப்ரஹ்மமே தானுய்க் காணப்படுவான்.

19. இந்த ஆருவது அதிகாரம் ஐம்பது பாசுரங்களினுலும், நான்கு சூத்திரங்களினுலும் பந்த மோக்ஷங்களின் லக்ஷணத்தை விவரிக்கும்.

ஆருவது அதிகாரம் முற்றிற்று

—: 0 :—

## 7-வது அதிகாரம்

### 1-ம் சூத்திரம்—வினுநிரூபணம்

[ஒ குருவே! ஸமாதி யோகத்தின் வல்லமையினுல் ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரமாயின், மோக்ஷம் எப்படியாகும்? அடியேனுக்குத் தெரிவியுங்கள்.]

1. ஶ்ரேஷ்டமான ஜ்ஞானப்ராகாரமாகியும், நிலையான மோக்ஷ பொக்கிஷமாகியும், பாபநாசகனுகியும், வெள்ளியங்கிரியில் வாசஞ்செய்பவனுகியும், பார்வதீபதியாகியுமிருக்கும் ஶம்புலிங்கனென்னும் குருவை வணங்குகின்றேன்.

2. சீடன் ஸத்குரவே என்றும், நதுரோரதிகம் என்றும் கூறும் வேத வாக்யங்களுக்கு இலக்கியமாய் விளங்கும் குருஶ்ரேஷ்டரே! வாழி! என்று துதித்து, விண்ணப்பஞ் செய்துகொண்டான்.

### ஶ்ருதி ப்ரமாணம்

i. ஸத்குரவே பஜேத் ய ஸ்வஸம்ஶயம் நாஶய தி

ii. நகுரோரதிகம் தைவம் பவதி ॥

3. ஓ ஷட்குண ஐஶ்வர்ய ஸம்பன்னரான குருவே! கர்மத்தினுற் பிறந்திருக்கும் தேகம் இருக்கும்போது ஸமாதி யோகத்தினுல் கர்மம் அழிந்து ப்ரஹ்மமாவேனென்று சொல்வது பொருந்ாது. இந்த விஷயத்தை நான் எவ்வாறு அறிந்துகொள்வேன் ?

4. தேகத்துடன் இருந்து, உலகத்தில் ஜனங்களின் இடையில் ஒருவனென்று சொல்லப்பட்டு, முன்போல் ஜீவிக்கிறவனை முக்தனென்று சொல்வது பொருந்ாதன்றோ ?

5. மனிதன் அறிந்தவுடனே (ஞானம் பெற்றவுடனே) ஸம்ஸாரம் என்னும் கயிறு அறுந்து போகாமலும், தேகம் விழுந்து போகாமலும், யாதொரு குறிகளுமில்லாது பரப்ரஹ்மத்தில் ஐக்யனுகாமலும் இருப்பதற்குக் காரணம் யாது? குருவே! சொல்வீராக.

—: 0 :—

## 2-ம் சூத்திரம்—ஜீவன்முக்தி நிரூபணம்

[கர்மவாசனை கெடாது தோன்றினும், அதனுல் தேகதர்மம் இருப்பினும், குற்றம் என்ன? அவனே முக்தனென்று சொல்லப் படுவான்.]

1. மகனே! கேள். இந்த விஷயத்தைச் சொல்லுகின்றேன். கர்மமென்பது சஞ்சிதம், பிராரப்தம், ஆகாமியம் என்று மூன்று விதமாயிருக்கும்.

2. முன் ஜன்மங்களிற் செய்த கர்மம் சஞ்சிதம் என்னும் பெயரோடு அகங்காரத்துடன் கூடியிருந்து, அநேக தேகங்கள் உண்டாதற்குக் காரணமாயிருக்கும்.

3. ஸ்வப்னத்தில் உண்டாகித் தோன்றிய துக்கமெல்லாம் நித்திரை தெளிந்தவுடனே நாசமாவது போலத் தன்னை யறிந்தவுடனே சஞ்சித கர்மம் முழுதும் நாசமாகும்.

4. அந்தக் கர்மங்களில் எந்தக் கர்மத்தால் இந்தத் தேகம் வந்ததோ, அது முடிந்ததன் மேல், தேகம் அழியும். அதுவே பிராரப்த கர்மமாம். அது இவ்வாறு ஜீவிக்கின்றது.

5. கயிற்றிற்றோன்றிய அரவின் பயம் கயிறென்று அறிந்த பிறகும் தோன்றுவது போல, (ஜீவன் முக்தனுக்கும்) பூர்வஜன்மத்தின் ஸம்ஸ்காரம் விடாது பிராரப்த மென்று சொல்லப்பட்டிருக்கும்.

6. பிராரப்தம் அநுபவித்தல்லது ஒழியாது. அந்தப் பிராரப்தம் மூன்று வகையாய் *இச்சை முதலிய ரூபங்களை யடைந்து சுகதுக்கங்களைக் கொடுக்கின்றது.

7. பிராரப்தம் மனிதருக்கு இந்தத் தேகத்திலே முடியும், அதிகார வாசனையுள்ள தேவதைகளுக்குப் பத்து பிரளயங்கள் கழிந்தாலல்லது அழியாது.

---

* இச்சை, அநிச்சை, பரேச்சை என்பன.

8. ஞானம் அடைந்த பிறகு, உண்டான கர்மம் அகங்கார சம்பந்தமில்லாததனால் பின்னுக்குப் பலத்தைக் கொடுப்பதில்லை. மலடியின் ஸம்போகம் போலப் பலனின்றி யொழியும்.

9. சீடனே! கேள். மனிதனுக்கு ஞானமடைவதனால் சஞ்சிதம், ஆகாமியம் என்னும் இரண்டு கர்மங்களும் நீங்கிப் போகும். பிராரப்த கர்ம மாத்திரம் தேகம் இருக்குமளவும் இருக்கும். இது வேத சாத்திரங்களிற் சொல்லப்பட்ட பொருளாம்.

10. சஞ்சிதம், ஆகாமியம் என்னும் கர்மங்கள் கெட்டு, பிராரப்த கர்மத்துடன் ஜீவிப்பவனுக்குத் தேகாதிகளில் அபிமானம் இல்லாதிருப்பதே (தேகாதிகளின் அபிமானம் ஒழிவதே) முக்தி யென்று சொல்லப்படும்.

11. மகனே! இவ்வாறு, தேகம் இருக்கையில் உண்டாகும் இந்த நிலைமையே ஜீவன்முக்தி யென்றும், இத் தேக முடிவில் உண்டாகும் நிலைமையே விதேக கைவல்யம் என்றும் அறிந்துகொள்.

12. ப்ரஹ்மஜ்ஞானி இந்தத் தேகம் அழியும் வரையில் இருப்பான். வேதத்தில் தஸ்ய தாவ தேவ சிரம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதனை நீ அறிந்துகொள்.

### ஶ்ருதி ப்ரமாணம்

*தஸ்ய தாவதேவசிரம் தத்வவித் ப்ராரப்தம் ।*
*நிவ்ருத்தே கைவல்யம் ஶரீராந்தே பவதி ॥*

தத்துவஞானி எதுவரையில் பிராரப்தம் இருப்பதோ, அது வரையில் இருத்தல் வேண்டும். அந்த ஞானிக்குத் தேகமுடிவில் நிலையான கைவல்யம் உண்டாகும்.

—: 0 :—

## 3-ம் சூத்திரம்—ஜீவன்முக்தன் நிலைமை நிரூபணம்

[தேகம் உள்ளவரையில் ஜீவிக்கும் யோகியின் ஒழுக்கம் எவ்வாறு இருக்கும்? குருவே! சொல்வீராக.]

1. வார்த்தைகளே வேதமாகவும், கடைக்கண்ணே கருணைக்கடலாகவுங் கொண்டு அடியேனைக் கைவிடாது காக்கின்ற குருவே! வாழி யென்று சொல்லிச் சீடன் வணங்கி வினவினன்.

2. பிராரப்த கர்மாநுஸாரமாய் ஜீவிக்கும் ஞானிக்கு எந்தக் கர்மங் கள் விதிக்கப்பட்டிருக்கின்றன ? குருவே ! உண்மையைத் தயவுடன் தெரிவித்தல் வேண்டும் (என்று சீடன் கேட்க, குரு சொல்லலுற் றனர்.)

3. ஓ மகனே ! கேள். ஜீவன்முக்தனது விஷயத்தில் விதி (செய்யத்தக்க கர்மங்களைச்) சொல்லக்கூடாது ; அவன் (புண்ய கர்மம், பாபகர்மம் என்னும்) இரண்டு கர்மங்களையும் மீறியிருக்கிறானு தலின்.

4. புண்ய பாபங்களின் சம்பந்தமில்லாததனால் என்னே ? ஞானி தேகத்தைப் பற்றியிருப்பவனாதலின், அவனுக்கு ஸத் கர்மங்கள் எக்கா லத்திலும் வேண்டியதன்றோ ? என்றால், சொல்லுகின்றேன் ; கேள்.

5. நீரில் மூழ்கினவனுக்கு நீரைக் குடிக்கவேண்டு மென்னும் ஆசை உண்டாகாதது போல, விசாரிக்குமிடத்து, தனக்கு அன்னிய மான பொருள் இல்லாமையால் ஞானிக்குப் பூஜை முதலியவற்றின் ஆசை உண்டாவதில்லை.

6. அந்த ஞானிக்கு எந்தத் தியானம் உண்டு ? எந்த ஜபம் உண்டு ? எந்தக் கர்மம் உண்டு? எந்தப் பூஜை உண்டு? எந்த உபசாரம் உண்டு ? எந்த நமஸ்காரம் உண்டு ? எந்தத் தேவர் அவனுக்கு வேறாக வுண்டு.

7. அறிவென்னும் மகன் பிறந்து, மறைப்பென்னும் தாய் இறந்தபோது உண்டான இந்த விருத்தி க்ஷய சூதகங்களிரண்டன் சம்பந்தத்தில் யோகிக்கு என்ன விதி உண்டு? (எந்தக் கர்மம் செய்யத் தக்கது?)

8. இதய மென்னும் ஆகாயத்தில் அறிவென்னும் ஆதித்தன் இருக்கும்போது (உதயாஸ்தமனங்க ளில்லாமல் இருக்கும்போது) ஞானிக்கு த்ரிகால ஸந்த்யாவந்தனஞ் செய்வது எங்ஙனம் உண்டா கும் ?

9. ஞானி எதனைச் சம்மதிக்கினும் பூஜையாம், எதனை நோக் கினும் இலக்ஷியமாம், எதனுடன் கூடினும் யோகமாம். ஜீவன் முக்தனுக்கு இதுவன்றி என்ன நியமம் உண்டு ?

10. அந்த யோகீஸ்வரனது நடையே தேவ யாத்திரை, அவன் நின்ற விடமே காசி க்ஷேத்ரம், அவன் மனம் பற்றியதே நல்ல மதம், அவன் பேசுவதே சிவமந்திர மெனப்படும்.

11. மகனே! ஜன்மமே யில்லாத அவனுக்கு மனிதத்வம் எவ்வாறு உண்டாகும்? மனிதத்வ மில்லாதவனுக்கு ஆஶ்ரம தர்மங்களைச் சொல்லுவது கூடாது.

12. இவ்வாறிருக்க, மரணபய முதலிய விகாரங்கள் அவனுக்கு உண்டாகா. அவனிடம் மீளவும் ஜன்மாந்தரத்தின் சமாசாரத்தை யெடுப்பதற்காகுமோ?

13. ஓ மகனே! இதனை யறியாது தேவர்களைத் தனக்கு அன்னியமாகப் பாவித்துப் பூஜிக்கின்றவன் ஜன்மத்தை யெடுக்கின்றானென்று உதேதி என்னும் ஶ்ருதி கூறுகின்றது.

ஶ்ருதி ப்ரமாணம்

உதேதி பேதவக்தாது நாநா யோனிஷு ஸர்வதா ||

(பேதவாதி எக்காலத்திலும் அநேக விதமான யோனிகளிற் பிறக்கின்றான்.)

14. த்யாயதி என்றும், வேத்தி என்றும், லாயதீவ என்றுமுள்ள வேதவாக்யங்களினால் யோகி தன் இச்சையினால் ப்ரஹ்மதத்பரனாயிருக்கின்றா னென்பது பெறப்படும்.

ஶ்ருதி ப்ரமாணம்

(1) த்யாயதி நகதாபி தைவதாந்யம் ||

(அவன் எக்காலத்திலும் இதர தேவர்களைத் தியானிப்பதில்லை.)

(2) வேத்தி ஸ்வமேவாத்வயம் ப்ரஹ்ம ||

[தன்னையே அத்வயமான (ஸ்வகதாதி பேத சூனியனான) பரமாத்மாவாய் அறிகின்றான்.]

(3) லாயதீவ ஸதாபாதி யோகி வஸ்துஜனார்ப்பிதம் ||
நதாதா நசபோக்தாச கிந்து ப்ரஹ்மைவ
கேவலம் ||

(ஞானி ஜனங்களால் கொடுக்கப்பட்ட பதார்த்தங்களை வாங்கிக் கொள்கின்றவன்போல், எக்காலத்திலும் காணப்படுகின்றான். அவன் வாங்கிக் கொள்பவனுமல்லன், உண்பவனுமல்லன். மற்றென்னவெனின், ஶுத்த ப்ரஹ்மமேயாம்.)

—: o :—

## 4-ம் சூத்திரம்—வினா நிரூபணம்

[கர்மங்களினாலே மோக்ஷம் உண்டாவதனால் அந்தக் கர்மங்களை எவ்வகையினும் விடுதல் கூடாது.]

1. வணங்கினவர்களுக்கு கல்பகத் தருவாகியும், நித்தியமான சுகத்தின் கருவாகியும், மோக்ஷமார்க்கத்துக்குச் சகாயகாரியாகியு மிருக்கும் நிஜ குருவே! வாழி! யென்று துதித்துச் சீடன் விண்ணப்பஞ் செய்தான்.

2. ஷட்குண ஐஸ்வர்ய ஸம்பன்னரான குருவே! ப்ரஹ்மஜ்ஞானியான யோகி கர்மங்களை விட்டு ஜீவிக்கின்றானென்று தெரிவித்தீர்கள். நான் இதன் உண்மையை எங்ஙனம் அறிந்துகொள்வேன்?

3. யாகம் முதலிய கர்மங்களினால் உண்மையான மோக்ஷம்உண்டாகுமென்று ஸத்புருஷர்கள் சொல்லுகின்றார்கள். ஆகையால், செய்யவேண்டிய கர்மங்களை விடுதல் கூடாதென்பது ஸத்யம்.

4. மேலும், தர்மாத்ஸுகம் (அதாவது தர்மத்தினால் சுகமுண்டாகும்) என்று வேதம் கூறுகின்றது. இவ்வாறிருத்தலினால் ஸத் கர்மத்தை விட்டால் மோக்ஷமுண்டாவது எப்படி? தயவு செய்து தெரிவியுங்கள்.

—: 0 :—

## 5-ம் சூத்திரம்—கர்மோபாதி நிரூபணம்

[கர்மமென்பது மந்தபுத்தியுள்ளவர்கள் செய்யத்தக்கதாம். அது தத்வ ரஹஸ்யத்தை யறிந்தவனை யடையாது.]

1. ஓ மகனே! நீ கூறினது ஸத்யம். நான் கூறுவதைக் கேள். வேதோக்தமான கர்மங்களினால் அகங்கார முதலியவைகளுக்குச் சுத்தி உண்டாகும். அதனால் ஸத்யமான மோக்ஷம் உண்டாகுமென்பது எங்ஙனம் பொருந்தும்?

2. ஓ மகனே! கேள். இந்தக் கர்மம் தானே மோக்ஷத்தைக் கொடுப்பதாயின், அவ் வேதாந்தத்தில் (முக்தியின் நிமித்தம்) விதிக்கப்பட்டிருக்கும் ஞானம் நிஷ்ப்ரயோஜன மென்று சொல்லவேண்டும்.

3. முறைப்படி, மருந்தை யுட்கொள்ளாது, மருந்தென்று சொன்ன மாத்திரத்தில் நோய் போவதுண்டோ? கர்மம் செய்யாமல் அறிந்த மாத்திரத்தில் துக்கம் நீங்காதென்று கூறின், நான் சொல்லுகிறேன்; கேள்.

4. முன்னர் உண்டான கயிற்றரவின் பயம் (உண்மையான நிலைமையை) அறிந்த பின்னர் நீங்குவது போலத் தன்னை யறிந்தவுடனே (நான் ஜீவாத்மா வென்னும்) அஜ்ஞானம் நீங்கும்.

5. இன்னும் சொல்லுகிறேன்; கேள். உன் மதத்தில் (அதாவது கர்மத்தினால் முக்தியுண்டாகு மென்று சொல்லும் உன் பட்சத்தில்) அடையப்படும் மோக்ஷம் ஸ்வரூப ஸித்தியென்றே சொல்லவேண்டும். இது ஸத்யம்.

6. அந்த ஸ்வரூப ஸித்தியானது நித்ய கர்மத்தினாலுண்டாவது ஸத்யமென்று கூறின், கர்மத்தை யநுஸரிக்கு முன்னரே தனக்கு ஸ்வரூப ஸித்தி இருக்கின்றதோ? பிறகு உண்டாகின்றதோ? நீயே சொல்.

7. முன்னில்லாத ஆத்மா கர்மங்களினால் தோன்றுவது உண்மையாயின், ஆத்மா நித்யமென்னும் வார்த்தையை நீ விட்டு விடுவாயாக.

8. தனது ஸ்வரூபத்திற்கு முன்னிருந்த கர்மத்தை நன்றாய்ச் செய்தேனென்று கூறின், தனக்கு என்ன பலன் உண்டு?

9. விசாரிக்குமிடத்து, ஏதாயினும் ஓர் பிரயோஜனத்தை யடைதற்காகக் கர்மம் வேண்டும். தான் முன்னரே அடைந்திருக்கும் பொருளில் கர்மம் சகாயமாவது எங்ஙனம்? நீயே சொல்.

10. இவ்விதமாய் இரண்டு விதத்திலும் கர்மத்திற்கு இடமில்லை. ஆத்மாவை மறைத்திருக்கும் அஜ்ஞானம் நீங்குவதற்கு ஸத்கர்மம் வேண்டுமென்று சொல்லுவாயாயின், கேள்.

11. ஆத்மா எக்காலத்திலும் ஸங்கமுள்ளதோ? ஸங்கமில்லாததோ? யோசனை செய்து உறுதியாகச் சொல்.

12. ஆத்மாவுக்கு மாயாஸங்கம் எக்காலத்திலும் ஸ்வபாவமானதென்று கூறின், மாயாஸங்கமே ஆத்மரூபமாய் நிலைத்திருப்பதனால் கர்மத்தினால் அது கெடாது.

13. மேலும், ஸங்கமில்லாத ஆத்மாவிடத்தில் மாயை இல்லை. உத்தம சிடனே! கேள். அவ்விடத்திலும் கர்மம் வேண்டுவதில்லை; ஆத்மா நிர்மலமாயிருப்பதனுல்.

14. எக்தெந்தப் பொருளுக்கு எக்தெந்தத் தர்மம் ஸ்வபாவமோ, அத் தர்மம் மாறுவதில்லை; சூரியசந்திரர்களைப் போல். இவ்வாறிருக்கையில் கர்மத்திற்குப் பலன் என்னே?

15. இவ்வாறுதலின், உபநிஷத்துக்களை ஆராயுமிடத்து, அந்யாஸ்ரய முதலிய வாக்யங்கள் இருப்பதனுல் மோக்ஷம் எவ்வாறு உண்டாகும்?

ஸ்ருதி ப்ரமாணம்.

அந்யாஸ்ரயம் யத: கர்ம தஸ்மாந்

முக்திர் நகர்மணு ॥

(எக்காரணத்தினுல் கர்மம் தன்னினும் வேருன தேவனை யாஸ்ரயித்துக் கொண்டிருக்கிறதோ, அக் காரணத்தினுல் கர்மத்தினுல் மோக்ஷம் உண்டாவதில்லை.)

—: 0 :—

## 6-ம் ஸூத்திரம்—ஜீவன்முக்தன் நிலைமை விஸேஷ நிரூபணம்

[ஓ குருஸ்ரேஷ்டரே! ஜீவன்முக்தர்கள், ஏன் அநேக விதமாயிருக்கிருர்கள்? இந்த விஷயத்தைத் தயவுடன் அடியேனுக்கு அறிவித்தல் வேண்டும்.]

1. குருவே தாய், குருவே தந்தை, குருவே உறவின்முறையார். குருத்வத்தை விடச் சிரேஷ்டமான வஸ்து இல்லையென்று புகழப்படும் ஸத்குருவே! அடியேன் விண்ணப்பத்தைக் கேட்டருளும்.

2. குருவே! தேகத்தோடிருக்கும் ஆத்ம நிஷ்டர்களெனப்படும் ஜீவன்முக்தர்கள் ஒரு விதமாயிராது, ஏன் பலவகைப்பட்ட நடையினரா யிருக்கின்ருர்கள்? இதுபற்றி அடியேனுக்குத் தெரிவித்தல் வேண்டும்.

3. என்று, சீடன் கேட்க, குரு அவனைச் சிரம் வருடி, உனக்கு இவ் விஷயத்தை உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளக்குகின்றேன்; கேள் என்று கூறுவாராயினர்.

4. பிராரப்த கர்மத்தின் ஸம்ஸ்காரம், தீவிரம், மந்தம், மத்திமம், ஸுப்தம் என்று நான்கு விதமாய் நின்று பலன் அளிக்கும்.

5. அந் நான்கினுள் தேகமுள்ளவனும் ஜீவித்துப் பசுவைப் போலத் தன்னிடத்தில் பிரீதியுள்ளவனுமிருப்பதே தீவிர மெனப் படும்.

6. மகனே! முக்கியமாய்ச் சுகதுக்கங்களை யநுபவித்து, தான் ஆத்மாதீனனும்ச் சிறு பையனைப் போல், வார்த்தையாடிக்கொண்டு விநோதத்திலிருப்பதே மத்திம மெனப்படும்.

7. சுகதுக்கா நுபவத்தை விட்டு, பரமாத்மாவிடத்தில் புத்தி நிலைத்து, அலையாது, அநுகூலமான தம்பதிகளைப்போல, அத்தகைய ஆநந்தத்தில் இருப்பதே மந்த மெனப்படும்.

8. எந்தத் துக்கமும் அடையாமல் நிர்விகல்பமான துரியா வஸ்தையிலிருக்கும் பரமுக்தனைப் போல் இருப்பதே ஸுப்தமெனப் படும்.

9. இவ்விதமாய்க் கர்மத்தின் வேகம் எப்படிப் பலன் தருமோ, அப்படியே ஞானிகள் நடப்பார்கள். முடிவில் அவர்களுக்கெல் லாம் ஒரே விதமான மோக்ஷம் உண்டாகும்.

10. யோகிகள் பிராரப்த கர்ம வாசனை எவ்வாறிருப்பதோ, அவ்வாறே இருப்பார்கள். இதற்குச் சரியாய் வேதவாக்யம் இருக் கிறது.

11. மேலும், குணபேதத்தினால் மனோவிருத்திகள் நான்கெனப் படும். அந்த விருத்திகளை யுடைய நிஜமுக்தர்களும் வெவ்வேறு தன்மையினரா யிருக்கின்றார்கள். அந்த விருத்திகளைச் சொல்லு கிறேன்; கேள்.

12. அவை விக்ஷிப்தம், கதாகதம், ஸம்ஸ்லிஷ்டம், ஸ்வலீனம் என்பன.

13. அவற்றுள் விஷயத்தை யநுபவித்தல் வேண்டுமென்னும் இச்சையினால் எக்காலத்திலும் சிந்தனையோடிருக்கும் தாமத குணத் தோடு கூடின மனோ வ்யாபாரமே விக்ஷிப்தமெனப்படும்.

14. ஓ சீடனே! ஒரு சமயம் யோகத்திலும், ஒரு சமயம் விஷயாநுபவத்திலும் நிலைத்திருக்கும் ராஜஸ குணத்துடன் கூடின மனோ வ்யாபாரமே கதாகதமெனப்படும்.

15. வேறொரு விஷயத்தில் பிரவர்த்தியாது ஆத்மாநுபவத்தில் அழுந்தியிருக்கும் ஸத்வ குணத்துடன் கூடின மனோ வ்யாபாரமே ஸம்ஸ்லிஷ்டமெனப்படும்.

16. நான், நீ, அது, இது என்பது ஒன்றும் தோன்றாது ஸத்யஜ்ஞாநாநந்த ஸ்வரூபமான பரப்ரஹ்மத்தில் ஸாக்ஷாப்தினைப் போல் இருப்பதே (நிர்குணமான) ஸ்வலீன மெனப்படும்.

17. இவ்விதமாய் அந்தக் குணமயமான (நான்குவித) மனோ வ்யாபாரத்துடன் கூடிய ஜனகராஜன் போன்ற சிவயோகிகளுக்கு உபாதியில் என்ன பயம் உண்டு?

18. ஓ மகனே! வாஸிஷ்ட ராமாயணத்தில் நிஸ்வாஸ காரிகையைப் படித்துப் பிராரப்தகர்ம வாசனா க்ரமத்தையும், மனோ வ்யாபார பேதங்களையும் அறிந்துகொள்.

—: o :—

## 7-ம் சூத்திரம்—நிர்லேபத்வ நிலைமை நிரூபணம்

[உலகத்தில் லௌகிக வ்யாபாரத்திலிருந்து கொண்டு சஞ்சரிக்கும் சிவயோகிக்குக் கர்மத்தினால் வாதை ஏன் உண்டாவதில்லை?]

1. மநுக்களும், முநிஸ்ரேஷ்டர்களும் அறிந்துகொள்ள முடியாதவரும், ஒப்பற்ற ஜ்ஞாநாநந்த ஸ்வரூபருமாகிய குருஸ்ரேஷ்டரே! அடியேன் தங்கள் அடைக்கலமென்று கூறி, சீடன் விநயத்துடன் மீளவும் வினவினான்.

2. ஓ குருவே! எல்லாரையும் வருத்துகின்ற கர்மம் ஜீவன்முக்தனுக்கு இருப்பினும், அது அவனை வருத்தாதிருக்கும் விதம் யாது? தயவுடன் அடியேனுக்கு அறிவித்தல் வேண்டும்.

3. இவ்விதமான விண்ணப்பத்தைக் குருஸ்ரேஷ்டர் கேட்டுச் சந்தோஷத்துடன் சீடனுக்கு மனதிலிருக்கும் சந்தேகம் நீங்கும்படி சொல்லுவாராயினர்.

4. கருட மந்திரத்தை யறிந்தவனைக் கண்டு சர்ப்பம் பயப்பட்டு ஒதுங்கி நிற்பது போல, பரமாத்மாவிடத்தில் ஐக்யமடைந்த சிவயோகியைக் கர்மம் பற்றாது ஒதுங்கி நிற்கும்.

5. மேலும், தேகம், இந்திரியம் முதலியவற்றுடன் இருப்பினும் அவை அத்யாஶ்ரமியான யோகியைப் பற்றமாட்டா; நீர் பற்றாத தாமரையிலை போல.

6. மரத்தில் நெருப்பு இருக்கிறது; அந்த நெருப்பில் மரம் இருப்பதில்லை. அதுபோல, ஞானியானவன் ஸம்ஸாரத்தில் இருக்கின்றான். ஸம்ஸாரம் அந்த யோகியிடத்தில் இல்லை.

7. (ஆகாயம்) வெளிச்சம், இருள் ஆகிய இவைகளுடன் கூடினும், ஆகாயத்தின் நிர்மலத்வம் அழிவதில்லை. அதுபோல, ஞானியைப் புண்ய பாப கர்மங்கள் பற்றுவதில்லை. (ஞானியானவன் எந்தக் கர்மத்தைச் செய்யினும், அது அவனைப் பற்றுவதில்லை; பற்றாததனால் அதன் பலனும் இல்லை.)

8. காட்டுத் தீயினால் சூழப்பட்ட மலையின்கண் எந்த மிருகம் அல்லது பட்சி நுழையும்? அவ்வாறு ஆத்ம நிஷ்டனான ஞானியைக் கர்மம் சூழாது; இது உண்மை.

9. ஞானி புலைச்சேரியிலாவது, காசிக்ஷேத்ரத்திலாவது மறைப்போடாவது, தெளிவோடாவது (தேகம்) விடுக. அதனால் அவனுக்கு உயர்வாவது, தாழ்வாவது உண்டாகாது.

10. தம்முள் வேறுபடுகின்ற விதி நிஷேதங்கள் ப்ரஹ்ம பாவத்தை யடைந்த யோகியிடத்தில் ஸமமானவையாம்; காசியில் செய்த பாப புண்யங்களைப் போல.

11. மரக்கிளை முறியும்போது அதில் உட்கார்ந்திருப்பவன் தான் விழவேண்டுமென்னும் விருப்பம் இல்லாதிருப்பினும், விழுவதுபோல, ப்ரஹ்மஜ்ஞானிக்கு (மோக்ஷாபேக்ஷை யில்லாதிருப்பினும்) மோக்ஷம் உண்டாகும்.

12. ஞானி தேகத்தை விட்டுப் பிரசித்தமான தூமாதிமார்க்கத்திற் செல்லினும், அர்ச்சிராதி மார்க்கத்திற் செல்லினும் புனர் ஜன்மத்தை யடைவதில்லை. அவன் பரிபூர்ணமான பரவஸ்துவேயாம்.

13. இவ்விதமாயிருக்கும் ஞானிக்கு அணிமாமுதலிய ஸித்திகள் இருப்பதில்லை. ஏனெனின், அவன் அந்த ஸித்திகளை யெல்லாம் அசேதனமான பிராந்திமயமென்று அறிந்து, அவற்றை விரும்பான்.

14. அந்த வித்திகளை யெல்லாம் விரும்பினால் அவன் அவற்றின் ஸாதனங்களை மந்திரமூலமாய் அப்யாஸஞ் செய்து அவற்றை யடைகின்றான்.

15. யோகிக்குப் பற்றுதற்கு உரிய நல்ல பொருளும் இல்லை; விடுதற்கு உரிய கெட்ட பொருளும், அடைதற்கு உரிய பதவிகளின் விருப்பமும் சிறிதும் இல்லை; ஞானிக்கு அவை ஜடமாகவும், த்ருஶ்ய மாகவும், மித்யையாகவும் இருப்பனவாதலின்.

16. பற்றுதல், விடுதல் முதலிய பிரயத்தனங்கள் ஒன்று மில்லாத ஞானியை இந்தப் போகங்களெல்லாம் தாமே கடலை யடையும் நதிகள் போல வந்தடையும்.

17. அகங்காரமில்லாத யோகிக்கு இந்த ஸகல போகாநுபவத்திலும் சற்றேனும் விருப்பமில்லை; சோரப் பெண்ணுக்குத் தன் கணவனிடத்தில் உதாஸீனம் உண்டாயிருப்பது போல.

18. ஞானிக்கு வாதை இல்லையென்று வேதம் ஜ்ஞாத்வா முதலிய வாக்யங்களிற் சொல்லுகின்றது. இதனை நீ விருப்பத்துடன் அறிந்து கொள்.

19. இந்த ஏழாவது அதிகாரம் ஏழு சூத்திரங்களினாலும், எண்பத்தேழு பாசுரங்களினாலும் ஜீவன்முக்தரின் நிலைமையைச் சொல்லாநிற்கும்.

ஏழாவது அதிகாரம் முற்றிற்று

—: 0 :—

## 8-வது அதிகாரம்

## 1-ம் சூத்திரம்—வினா நிரூபணம்

[குருஶ்ரேஷ்டரே! இன்னும் நான் அறிந்துகொள்ளவேண்டிய விஷயங்கள் எல்லாவற்றையும் அடியேனுக்குத் தயவுடன் தெரிவித்தல் வேண்டும்.]

1. பயம், துக்கம் ஆகிய இவைகள் இல்லாதவனும், ஜயசக்தி யுடையவனும், ஶ்ரேஷ்டமான ஆனந்தத்தினால் நிறைந்தவனும், பார்வதீ தேவிக்குப் பிரியனுமாகிய சிவபெருமானை வணங்குகின்றேன்.

2. குருவே! தாங்கள் ஸம்ஸாரமென்னும் ஸமுத்ரத்திற்கு அகஸ்தியர் போன்றவரும், பாபமென்னும் மன்மதனுக்கு ருத்ர மூர்த்தி போன்றவரு மாகின்றீர்களென்று, துதித்துச் சீடன் பின் வருமாறு கேட்கத் தொடங்கினான் :—

3. ஸ்வாமி! அடியேன் மனத்தில் உண்டான சந்தேகங்களை யெல்லாம் அடியேன் தங்களிடம் கூற, அவற்றை நன்கு தெரிவித் தீர்கள்.

4. அவை யனைத்தையும் கேட்க, முன்னர் என்னிடமிருந்த ஸம்ஸார காரணமான அஜ்ஞானம் கெட்டு, அடியேனிடத்தில் ஆத்மவிசாரம் உண்டாயிற்று.

5. அடியேன் இன்னும் அறியவேண்டியது என்ன இருக் கின்றது? தங்களை முழுதும் நம்பின புதல்வனான அடியேன் அறியு மாறு அருளிச்செய்ய வேண்டு மென்று சீடன் குருவின் பாதகமலங் களை வணங்கித் தோத்திரஞ் செய்தனன்.

—: o :—

## 2-ம் சூத்திரம்—குருஸம்போத நிரூபணம்

[நீ கேட்ட விஷயங்களை நீயே மனவொருமையுடன் ஆலோசனைசெய்தல் வேண்டும்.]

1. சீடனே! உனக்கு யாதொரு சந்தேகமு மில்லாதவாறு வேதாந்தத்தின் ஸாரமான விஷயத்தைக் கூறினேன். இந்த விஷயத்தை நன்றாய் ஆராய்ந்து ஆனந்தமடைவாயாக.

2. முதலிலிருந்து பார்க்குமிடத்து, இவ் வேதாந்தத்தில் நாம ரூபங்களின் தோற்றம் மித்தையென்றும், நீயே பரவஸ்து வென்றும் கூறப்பட்டுள்ளது.

3. சீடனே! கேள், தத்வமஸி[1] யென்றும், த்வந்ததஸி[1] யென்றும், தத்யோஹம் என்றும் ச்ருதி வசனங்கள் இருப்பதனால் நீயே பரமாத்மா வென்பது பெறப்படும்.

4. வேதவசனத்தினால் (விருத்தி க்ஷய) சூதக முதலியவற்றிற் புத்திக்கு எவ்வாறு திடநம்பிக்கை உண்டாகின்றதோ, அவ்வாறே ததஸி[1] (நீயே அந்த ப்ரஹ்ம மாயிருக்கின்றாய்) என்று கூறும் வேத வசனத்தில் உனக்கு நம்பிக்கை உண்டாகட்டும்.

5. (நீயே ப்ரஹ்ம மென்னும் அர்த்தத்தில்), உனக்குச் சந்தேக விபரீதங்கள் உண்டாயின், உதங்கன் தவத்தின் கதி உனக்கும் வாய்க்கும்; அறிந்துகொள்.

6. நான் கூறிய விஷயங்களைக் கேட்டு நம்பினால் மோக்ஷம் உண்டாகும். நம்பாமற்போனால் சாம்பலில் நெய் சொரிந்து ஓமம் செய்தது போலாம்.

7. சந்தேகம் நீங்கின், ஆநந்தக் கடலானது மந்தரமலையின் சலனம் நின்ற பிறகு, சலனமற்றிருக்கும் பாற்கடலைப் போல அழகாக மிளிரும்.

8. முன்னர் இந்தத் தேகபாவம் ஸத்யமாய்த் தோன்றியது போல, நீயே பரமாத்மாவென்னும் பாவம் ஸத்யமாய்த் தோன்றுமளவும் அநுஸந்தானம் இருத்தல்வேண்டும்.

9. ஓ சீடனே! புறத்தில் எவ்வாறாயின் என்னை? அகத்தில் நீ அறிந்த நித்யாநந்தத்தை மறவாமல் இந்த்ரியங்களுக்கு இடங்கொடாமல் அநுபவிப்பாயாக.

10. இது ஸகல வேதார்த்தம்; இது யோகிகளின் மார்க்கம்; இது குருஶ்ரேஷ்டர்களின் கொள்கை; ஆகையால் நீ உன் ஸ்வரூபத்தை மறவாதிருப்பாயாக.

—: 0 :—

## 3-ம் சூத்திரம்—உண்மை நிலைமை நிரூபணம்

[தத்வமஸி' யென்பதில் ஏதேனும் ஒரு பேதத்தைக் கூறின், அது தகுதியாகாது.]

1. மகனே! கேள். அந்தத் தத்வமஸி' யென்னும் வாக்யத்தில் நீ உவமையில்லாத பரப்ரஹ்ம மென்று கூறுவது அர்த்தவாதமன்று.

2. மனிதனைத் தேவேந்த்ர னென்று புகழ்வது போல, ப்ரஹ்மம் நீ என்னும் வாக்யத்தைத் துதியாக (துதியார்த்தமாக)ச் சொல்லவில்லை.

3. நீயே பரவஸ்து வென்று கூறும் (சித்தார்த்தபோத) மஹா வாக்யங்கள் சேவகனை இராஜனென்று புகழ்வது போல, உபசாரமாகக் கூறப்பட்டவை யன்று.

4. தன்னை ப்ரஹ்மமென்று கூறும் வாக்யம் பிரதிமையைத் தேவதா சரீரமென்பதுபோல, உபாஸனு பரமல்லவென்று நீ அறிந்து கொள்.

5. நீயே பரப்ரஹ்மமென்னும் வாக்யத்தை இந்த மாணவன் நெருப்பென்று சொல்வதுபோல, ஒப்புமையை அறிவித்தற்காக் கூறவில்லை. இது ஸத்யம்.

6. நீயே பரவஸ்து வென்னும் வாக்யம் குடம் மண்ணைவிட வேறன்றென்று கூறுவது போலக் காரிய காரண பாவத்தைத் தெரிவிக்கிறதென்பது பொய்.

7. ஓ சீடனே! கேள். நீயே பரமாத்மா வென்று கூறும் வாக்யம் நீலோற்பல மென்று கூறுவது போலக் குணகுணித்வத்தைக் கூறுவதன்று.

8. மகனே! நீயே ப்ரஹ்ம மென்னும் வாக்யத்தை இது கவ்ய பிண்டம் (காட்டுப் பசுவின் தேகம்) என்பது போல, ஜாதிவ்யக்திகளைத் தெரிவிக்கும் வாக்யமாக அறிந்துகொள்ளாதே.

9. ஆகாயத்தின் பாகமென்றும், ஆகாயத்தின் விகாரமென்றும் எண்ணுவதற்காகாத கடாகாசம் போல், நீ பரமாத்மாவிடத்தில் இருக்கின்றாய்.

10. அநேந ஜீவேனாத்மநா னுப்ரவிஸ்ய நாமரூபே என்னும் ஶ்ருதி வசனம் இருப்பதனால் நீ இவ்வாறு அறிந்துகொள்.

11. ஓ மகனே! இக்காரணத்தினால் நீயே ஸத்தும், நிர்மலமுமான ப்ரஹ்மமென்னும் விஷயத்தில் புத்திபேதங்களாகிய வாதை ஏதுமில்லாமல் பரப்ரஹ்மத்தில் ஸுகித்திருப்பாயாக.

## 4-ம் சூத்திரம்—நிஜாநந்த நிரூபணம்.

[உத்தமகுருவே! தங்கள் அருளினால் அடியேன் எவ்வித பாசமுமில்லாத பரப்ரஹ்மமானேன்.]

1. குருகுல சூரியனே! போற்றி! வணங்கினவர்களுக்குக் காமதேநுவே! போற்றி! உமக்கு நான் வேறல்ல, போற்றி! குருஶ்ரேஷ்டரே! போற்றி! போற்றி!

2. தந்தையே! கேட்டருளும். நீயே நிஷ்களங்கமான பரப்ரஹ்மமாயிருக்கின்றாயென்று அநேக விதமாய் அன்பினால் அடியேனுக்குப் போதித்தீர்கள்.

3. அடியேன் சந்தேகமில்லாதவனாய் அந்த ப்ரஹ்ம பாவத்திற் பொருந்தி நிலேத்தேன். அதனால் அடியேனுக்கு உண்டான சந்தோஷத்தை இவ்வாறு தெரிவிக்கின்றேன் ; கேட்பீராக.

4. ஓ குருபுங்கவரே! தங்களிடத்தில் தேக்கங்கொண்டு மேலிட்டுப் பெருக்கெடுக்கும் கருணைவெள்ளம் அடியேன் மன வழுக்கைக் கழுவுதலினால் அடியேன் நிர்மலனானேன். இது உண்மை.

5. ஓ யோகிகளால் வணங்கப்படுபவரே! அடியேனை எப்போதும் மயக்குகின்ற அஜ்ஞானப் பேயானது தங்கள் பாததூளியாகிய விபூதியினால் நீங்கிற்று.

6. ஓ பரப்ரஹ்ம ஸ்வரூபரே! தங்கள் திருவடித் தாமரைகளின் பரிமளம் பரவி அடியேனிடத்திலிருந்த பாபமாகிய துர்காற்றத்தைத் துடைத்ததனால் நான் ஸுசித்தனானேன்.

7. பூமி முதலியவை உப்பளத்தை யடைந்து உப்பாவது போல, அடியேன் தேகம், இந்த்ரியம் முதலியவை யனைத்தும் தங்கள் பாத ஸ்பர்ஶத்தினால் நிர்மலமாயின.

8. ஓ மங்களஸ்வரூபரே! தங்கள் சம்பந்தத்தினால் அடியேன் காணங்களை அஜ்ஞானம் மூடுவதில்லை. ஆதித்தனது குதிரைகளுக்கு இருட்பயம் உண்டாகுமோ?

9. ஓ ஆநந்தஸ்வரூபரே! வேம்பானது வெல்லத்துடன் சேர்ந்து மதுரமானது போல, தங்கள் அன்பினாற் கூடின அடியேன் புத்தியானது அஜ்ஞானம் இல்லாததாயிற்று.

10. ஸ்வாமி! அடியேனது (அவித்தை, அஸ்மிதை, ராகம், த்வேஷம், அபிநிவேஸம் என்னும்) பஞ்ச க்லேஸங்களும், (அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஜ்ஞானமய கோசம், ஆநந்தமய கோசம் என்னும்) பஞ்ச கோசங்களும், (முற்கூறிய) ஒன்பது குணங்களும், எட்டுப் பாசங்களும், எட்டுப் பிரகிருதிகளும், எட்டுப் புரிகளும் தங்கள் உபதேஶத்தினால் நாசமடைந்தன.

11. ஓ குருவே! தங்கள் வசன ரூபமான ஆகமத்தின் உபந்யாஸமென்னும் பாற்கடலை நான் அடைந்து, ஆநந்தமாகிய அமிர்த ரஸத்தை யநுபவித்து மோக்ஷ ஸ்வரூபனானேன்.

12. கருணைக் கடலே! பாப புண்யங்களின் ஆரோபிதத்திற்கு ஆஸ்பதமாகாத அந்தப்பரமாத்மாவே நான் ஆனேன். அவ்வாநந்தத்தை அடியேன் எவ்வாறு கூறுவேன்?

13. தங்கள் பாதாரவிந்தத்தைச் சேர்ந்த அடியேனுக்கு இனி மேல் யாருடன் த்வேஷம்? யாருடன் ஸ்நேஹம்? அடியேனுக்கு அன்னியர் யார்?

14. ஓ குருஸ்ரேஷ்டரே! பரமாணுவின் வடிவத்தை யடைந்திருந்த அடியேனைப் பரிபூர்ணமான பரப்ரஹ்மமாகத் தோன்றுமாறு செய்த தங்கள் கருணை வாழ்க!

## 5-ம் சூத்திரம்—நூற்சிறப்பு நிரூபணம்

[விசாரிக்குமிடத்து, இவ் வநுபவஸாரம் அப்யாஸிகளுக்கு நிர்மலமான முக்தியை யுண்டாக்கும்.]

1. இவ் வநுபவஸார மென்னும் நூல் நவீன யுக்தி, அநுமானங்களுடன் பூமியில் எக்காலத்திலும் ஸாதகர்களினுற் சேவிக்கப்படும்படி இயற்றப்பட்டது.

2. இவ் வநுபவஸாரம் உபநிஷத்துக்களின் பொருளும், ஸகல சாத்திரங்களிற் சொல்லப்பட்ட விஷயமும், முன்னோர்களின் கொள்கையும், குருபதேசமும், தத்வஜ்ஞானிகளின் ஸத்யமார்க்கமுமாம்.

3. ஆகையால், மோக்ஷாபேக்ஷையுள்ளவர் அனைவரும் வேறு மதங்களிற் புகுந்து உழலாது, இந்த நூலை குருவின் முன்னிலையில் படித்துக் கேட்டுப் பொருளை யுணர்ந்துகொள்ள வேண்டும்.

4. இந்த நூலில் கூறப்படும் பொருள் சூரியோதயம் எவ்வளவு விரைவில் இருளைப் போக்குமோ, அவ்வளவு விரைவாக ஸகல சந்தேகங்களையும் போக்கும்.

5. இரத்தினக் கண்ணாடியில் தன் முகத்தின் அழகு நன்றாய்க் காணப்படுவதுபோல, இந்த நூலில் ஆராய்ந்து நோக்கின், ஸகல ஜனங்களுக்கும் உண்மை நன்றாய்க் காணப்படும்.

6. வெவ்வேறு நூல்களைப் படித்து வாய் உலராது, இந் நூலை ஒரு முறை சந்தோஷத்துடன் கேட்பவர்கள் மேலான சிவபதத்தைக் கொள்ளைகொண்டு ஸுகித்திருப்பார்கள்.

7. விஷயாபேக்ஷை யில்லாதவர்களுக்கும், உத்தமர்களுக்கும், அறியவேண்டுமென்னும் விருப்பமுள்ளவர்களுக்கும் கூறவேண்டும். மூடர்களுக்கு அபேக்ஷித்து ஒரு முறையாயினும் கூறக்கூடாது.

8. இந்நூலை எழுதினவர்களும், படித்தவர்களும், பொருளைச் கேட்டவர்களும், சந்தோஷத்துடன் பொருளைச் சொன்னவர்களும் பார்வதீபதியான சிவனே தாமாய் ஆநந்தத்திலிருப்பார்கள்.

9. இவ்வாறு நிஜகுண சிவயோகிகள் சந்தோஷத்துடன் அருளிச்செய்தனர். மஹிமைக்கு ஸமுத்ரனான சிவபெருமான் இந்நூலை ஸத் புருஷர்கள் பாராயணஞ் செய்யுமாறு அருள்புரிக!

10. இந்த எட்டாவது அதிகாரம் ஐந்து சூத்திரங்களினாலும், ஐம்பது பாசுரங்களினாலும் உத்தமர்கள் புகழுமாறு சிறப்பிக்கப் பட்டது.

இவ் வநுபவஸாரத்தில் எட்டு அதிகாரங்களும், நாற்பத்தாறு சூத்திரங்களும், ஐந்நூற்று முப்பத்தைந்து பாசுரங்களும் பண்டிதர் பலரும் புகழுமாறு ப்ரகாசித்துக் கொண்டிருக்கும்.

எட்டாவது அதிகாரம் முற்றிற்று

—: 0 :—

## அநுபவ ஸாரம் முற்றிற்று

நிஜகுண சிவயோகிகள் மேலடி வாழ்க!



Penrose & Co., Printers, 19, Sunkurama Chetty Street, G.T., Madras.

# பதிப்பித்த புத்தகங்கள்

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | சித்தாந்த சிகாமணி மூலமும்—உரையும் | 2 | 8 | 0 |
| 2. | வசவபுராணம் மூலமும்—உரையும் | 8 | 0 | 0 |
| 3. | வீராசாரக் கட்டளை | 0 | 1 | 6 |
| 4. | பிக்ஷாடன நவமணி மாலை மூலமும்—உரையும் | 0 | 2 | 0 |
| 5. | பெரியநாயகியம்மை விருத்தம் மூலமும்—உரையும் | 0 | 3 | 0 |
| 6. | வீரசைவ விளக்க வினவிடை | 0 | 12 | 0 |

# இனிப் பதிப்பிக்கும் புத்தகங்கள்

1. மணிவாசகப் பெருமான் வரலாற்று வினவிடை
2. வீரசைவ சிவபூஜாவிதி
3. ஸ்ரீ வைஷ்ணவமும் வீரசைவமும்
4. வீராகமம்
5. இஷ்டலிங்க வபிஷேகமாலை யுரை
6. பழமலையந்தாதி யுரை
7. தஹனமும் கனனமும்

S. C. Nagi Chettiar, Madras.